"WE NEED HELP FROM ABOVE, FOR WITHOUT IT WE ARE HELPLESS"

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE".




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **22.**] ஆனந்தஸு தைமீ, **1915**ஸு ஜனவரிமீ [சஞ்சிகை **10.**


"WE NEED HELP FROM ABOVE, FOR WITHOUT IT WE ARE HELPLESS"—*Admiral Sir John Jellieose,*

**DEATH OF THE VICEROY'S SON: UNIVERSAL SYMPATHY.**

MADRAS CHILDREN.

Mr. C. V. Swaminatha Aiyar, Honorary Secretary, Children's Day movement, Madras, has sent the following Message to His Excellency the Viceroy on the 22nd instant :—" Madras Children depressed and heart-broken join their parents in offering their respectful and heartfelt sympathy to His Excellency the Viceroy and the Honourable Diamond Hardinge in their sad breavement by the untimely death of Lieutenant the Honourable E. C. Hardinge. They feel the loss as that of a brother."

THE following telegram, has been receiv-d by Mr. C V. Smaminathiyar, Secretary, Children's Day Movement. Lalitalaya Mylapore, Madras :—"His excellency is grateful to you, and the Madras Children for your kind sympathy with him in his sorrow."

நமது அரசர் பிரதி ஜேஷ்ட குமாரர் மரணம்:

ஜனங்களுடைய அனுதாப சிந்தை.

சென்னையில் "ஹார்டிஞ்ச் ஜயந்தி" கொண்டாடுவதற்கான பாலர்குழாம் சம்பந்தமாக ஏற்பட்ட பாலபோத ஸமஷ்டி சேவை சங்கக்காரியதரிசி ம-ா-ா-ஸ்ரீ வி. வி. ஸ்வாமிநாதையர் அவர்கள், டிஸெம்பர்மீ 22உ கனம் பொருந்திய இராஜப்பிரதிநிதியவர்களுக்குப் பின்வரும் தந்திசமாசாரம் அனுப்புவாராயினர்.

"சென்னைச் சிறுவர்கள் கனம் பொருந்திய அரசர் பிரதிநிதியவர்களுடைய (ஜேஷ்ட குமாரர்) கனம். லெப்டினென்ட் இ. வி. ஹார்டிஞ்ச் அவர்கள் மரணமடைந்த துக்கசமாசாரத்தைக் கேட்டு அனுதாபத்தால் மனமுடைந்து முகம்வாடி, கனம்பொருந்திய அரசர் பிரதிநிதிக்கும் அவருடைய செல்வக்குமாரி கனம் டயமண்ட் ஹார்டிஞ்ச் அவர்களுக்கும் மட்டு மரியாதையோடு தங்கள் ஹிருதயபூர்வமான் அனுதாபத்தை அவர்கள் பெற்றோர்களோடு ஒன்று சேர்ந்தவர்களாய் தெரிவிக்கலாயிருக்கிறார்கள். கனம் இ. வி. ஹார்டிஞ்ச் போனது அவர்கள் சகோதரர் போனது போலிருக்கிறது."

இதற்கு கனம் பொருந்திய இராஜப் பிரதிநிதியவர்கள் தம் அந்தரங்க காரியதரிசி மூலமாய்ப் பின்வரும் பதில் தந்தி யனுப்பியுள்ளார்:—"டில்லி. டிசெம்பர்மீ 28உ :சென்னை, மைலாப்பூர், லலிதாலயம், பாலர் திருவிழாக்கொண்டாடும் சபையின் காரியதரிசி ஸ்வாமிநாதையர் அவர்களுக்கு.—

"கனம் பொருந்திய அரசர்பிரதிநிதியவர்கள் அவருக்கு நேர்ந்த துக்கத்தில் நீரும் சென்னைச் சிறுவர்களும் உளம்கசிந்து காட்டிய அனுதாபத்துக்காக நன்றியுள்ளவராயிருக்கிறார்."

## "BY THIS SIGN WE CONQUER."

### The Conflict of Spiritual Ideals.

### ஜயமுத்திரை.

"This is not merely a material, it is also a spiritual conflict, said the British Prime minister in tones of conviction in the opening weeks. Upon this issue every thing that contains the promise and hope that leads to emancipation and fuller liberty for the millions who make up the masses of mankind will be found sooner or later to depend."

"The great social forces which roll onward in their majesty and might are on our side" exclaimed Gladstone in one of his great speeches.

It is equally true to affirm that in this Titanic War the great moral forces which roll onward in their majesty and might are on the side of the Allies.

He who does not know what those great moral forces are is deprived of half his armour, for thrice is he armed who knows his quarrel just and who has eyes to see the invisible Allies which fight on his side. All who would arm themselves in this great conflict for spiritual ideals should read a remarkable article by Mr. Benjamin Kidd in the "Daily Mail Year Book" for 1915.—*Public Opinion.*

Germany's ideal is "the religion of force inspired and organised as the world has never seen it before."

"There is only one way in which great Britain can attain to victory in the conflict. She can only win if, behind all her forces and through all her efforts, she is ultimately sustained in the prolonged struggle by an idealism which is higher and a belief and a determination which are stronger than those of Germany in this war."

"Progress represents that great spiritual integration of mind which has raised the conception of Right to the plane of the Universal by projecting the sense of human responsibility outside all theories of the State whatsoever. It has made RIGHT independant of and superior to all interests of the State on whatever claim or mission they may he based, on whatever scale they may be represented or whatever force they may be backed."

"The contrary doctrine that no Right is above the State and that the State has no standard but that of power and expediency" resting on omnipotent force has been the standing challenge to liberty and progress in every phase of the stupendous struggles which make the history of the West. The principles of a higher civilisation have always broken it. But every new absolutism of the world has constantly essayed to follow in the path of its predecessors, and to inscribe on its banner the inexorable motto which is inherent in the conception and which drives them all to their fate, "World Power or Downfall."

Social Evolution is based on *eternal moral forces* which bear the burden of the FUTURE—the ultimate triumph of the principle of Universal Right.—*Benjamin Kidd.*

### *"Sarvam Vishnumayam Jagat."*

"Whenever O descendant of Barata, there is decline of *Dharme*, and rise of *Adharma*, then I body Myself forth. Though I am unborn, of changeless nature, and lord of Beings, yet subjugating My Prakriti, I come into being by My own Maya."—*Bhagavad Gita.*

"Indeed unless our pride is humbled, unless we cling to truth unflinchingly, we cannot see God—"The ultimate triumph of the Principle of Universal Right."—*The Lesson of Vamanavathar.*

புஸ்தகம்-22.] [சஞ்சிகை-10.
"The Children's Favourite, The Teachers' Help, And the Parents' Guide."



ஆனந்தஞூ
தையீ

விவேக சிந்தாமணி

January-
February.
1915.

ESTABLISHED 1892

# THE WAR—"யுத்த காண்டம்"—NUMBER.

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியந் தாலிகழில் வந்ததேன்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## A HOUSE-HOLD NARRATIVE OF CONTENDING FOLKS IN THE GREAT WAR OF 1914.

"உன்னதமாம் பாரதப்போர் செய்வார் கதை."

"WE NEED HELP FROM ABOVE, FOR WITHOUT IT WE ARE HELPLESS."

ADMIRAL SIR JOHN R. JELLICO'S LETTER.

"தெய்வபலம் வேண்டும்: அஃதின்றி நமது பலம் செல்லாது"

அட்மிரல் ஸர் ஜான் ஜெல்லிகோ எழுதிய கடிதம்.

"It is good to know we are in the people's thoughts and prayers, for we need them. Our enemy is bold and skilful and with the new method of warfare, mines and submarines, it requires great care and vigilance to retain our superiority in the battleship class of vessel which will be the ultimate arbiter of the command of the sea. We need help from Above, for without it we are powerless, and I feel we shall obtain it for our cause is good. J. R. Jellicoe"—to a relative in Ceylon. (Vide Colombo telegram of Jany. 7th.)



Admiral Sir JOHN R. JELLICOE.

*In Supreme Command of the British Home Fleets.*

"எண்ணினேன் எண்ண மிது ஸ்வாமி" என்றார்போல "ஜனங்கள் நம் நலத்தையே கருதிப் பிரார்த்தித்து வருகிறார்களென்பதைக் கேட்கச் சுபமாயிருக்கிறது: ஏனெனில் அந்த பலம் வேண்டும் தான். எதிரி துணிவும் ஸாமர்த்தியமு முன்ளான்: கடலிற் சுரங்கமிட்டு தண்ணீரில் மூழ்கியோடித்தாக்கும் படகுகளோடு சண்டை செய்யும் நவயுத்த தோரணையில் போர்க்கப்பலின் மேலான பலத்தைக்காக்க விழித்தகண்மூடாது சாக்கிரதையாகவிருக்கவேண்டியிருக்கிறது. போர்க்கப்பல்பலத்தாலே கடலில் நம் அதிகாரம் சல்லவேணும். இதற்கு தெய்வ பலம் வேண்டும்: அஃதின்றி நமது பலம் செல்லாது. நமது பக்கத்தில் நல்ல எண்ண மிருப்பதால், உன்னத் துணர்வில் அந்த உதவி கிடைக்குமென்றே யிருக்கிறேன்: ஜெ. ஆர். ஜெல்லிகோ" இலங்கையிலொரு பெந்துவுக்கு எழுதிய கடிதம்.

## "BY THIS SIGN WE CONQUER."

### "SYMBOLS" OR : "REALISED IDEALS.'

"Observe........that of man's whole terrestrial possessions and attainments, unspeakably the noblest are his Symbols, divine or divine-seeming ; under which he marches and fights, with victorious assurance, in his life-bittle : what we can call his Realised Ideals."—*Carlyle.*




ஜய முத்திரை.

'வன்' நதிதீரத்தில் நடந்துவரும் சண்டை மேற்கே வடகடல்மட்டும் ஓடி, தென்கிழக்கே 'ஸ்விட்ஸர்லாந்து' எல்லை வரையில் பரவி 260-மைல் தூரம் விஸ்தீரணமுடையதாயிருக்கிறது. மஹாபாரதப் போரிலும் இது மிகப் பெரியதாக விருக்கின்றமையாலும் இந்தப் பார'தப்போரின் முடிவும் மஹாபாரதப்போரைப்போல், தர்மம் ஜயிக்குமா அதர்மம் ஜயிக்குமா என்பதை எதிர்பார்த்திருப்பதாலும் இந்தச் சண்டையை நாமெல்லாரும் நன்ருய் ஊகித்துணர்ந்து ஆராய்ந்து கவனிக்கவேண்டும். இஃதன்றி கிழண்டைப் போர்க்களத்தில் போலண்ட் தேசத்திலோடும் 'விஸ்துலா' நதிதீரத்தில் 'வார்ஸா'வைச்சுற்றி ருஷியருக்கும், ஆஸ்திரியா-ஜெர்மனிக்கும சண்டை நடந்து வருகிறது. இந்த மஹா பெரிய சண்டை யென்னமாக உண்டாயிற்று?

ஒரு பள்ளிப்பையன் புத்திகெட்டுக் கேடுபார் பேச்சைக்கேட்டு * ஆர்சடியூக் ப்ரான்ஸ் பெர்டினெண்ட் அவர்களையும் அவருடைய மனைவியாரையும் விராஜிவோ பட்டணத்துத் தெருவில் கொலை செய்து விட்டான். அது காரணமாக உலகெலாம் பரவியுள்ள இப்பார'தப்போர் இப்பொழுது வெகு உக்கிரமாக நடந்து வருகிறது. இந்திய துருப்புகளும் சென்று சண்டை போட்டு போர்க்களத்தில் எதிரிகளைத் துரத்தியடித்தும் வராளமாக மாண்டு மடிந்து வருகிறுர்கள். இதரதேசத்துத்துருப்புகளும் வராளமாக மாண்டு மடிந்து வருகிறுர்கள். இரத்தவெள்ளம் ஆருகப்பெருக செத்தவர்கள் பிணம் மலையாகக் குவிந்து வருகிறது. இவ்வளவும் என்னத்திற்கு? வேடிக்கையா? விளையாட்டா? வேடிக்கையுமில்லை விளையாட்டுமில்லை. எல்லாம் வினைப்பயனே.

இந்தப் பார'தப்போர் இகலோகத்தில் நடந்து வந்தாலும் முக்கியமாய் (Spiritual) பரதர்மகாரணமானதென்று சொல்லலாம்.

ப்ரஹ்லாதன் அசுரர்களுக்கு அரசனுக மஹா விஷ்ணுவாக முடி சூட்டப்பெற்றபின் அவருடைய பேரப்பிள்ளையாகிய மஹாபலி (மஹாவலி) சக்ரவர்த்தி உலகெலாம ஒரு குடைக்கீழ் ஆண்டு பூலோகத்தில் தனக்கு அதிகாரம் ஸ்திரப்பட்டது போதாமல் ஸ்வர்க்கலோகத்தையும் கட்டியாளவேண்டுமென்று அசுவமேதயாகம் செய்தார். இந்திரனுக்குப் பட்டம் போய்விடும்போலிருந்தது. தேவர்களெல்லாரும் சென்று விஷ்ணுவினிடம் முறையிட்டுக்கொண்டார்கள். "தர்மமேஜயம்! பயமில்லை!" என்று அவர் அவர்களுக்கு அபயம் கொடுத்தனுப்பினர். இது தேவலோகத்தில் (Spiritual world) நடந்த சமாசாரம்.



*The late Archduke Franz Ferdinand and his wife the late Duchess of Hohenburg.*
* கொலையுண்டிறந்த ஆர்ச் டியூக் ப்ரான்ஸ் பெர்டினெண்டும் அவருடைய மனைவி டச்செஸ் ஆவ் ஹோஹன்பர்க்கும்.

பூலோகத்தில் மஹாபலி சக்ரவர்த்தி திக்கு விஜயம்செய்து தேச தேச மன்னர்களையெல்லாம் ஜயித்து அளவற்ற ஐசுவரியம் தேடி, எல்லாவற்றையும் தானதர்மத்தில் செலவழிப்பான் அசுவமேதயாகம் செய்து யஜ்ஞமுடிவில் பிராமணர்களுக்கும் யாசகர்களுக்கும் கேட்டதை யில்லை யென்னுமல் கொடுத்து வழங்கிவந்தான்.

அப்பொழுது ஒரு பிராமணச்சிறுவன், பிரஹ்மசாரி விருதம் பூண்டோன், கையில் தண்டுகமண்டலம் ஏந்தி உக்கிரமா பெரித்த வெயிலுக்கு நிழற்ற குடையொன்று பிடித்துக்கொண்டு யாகசாலைக்குள் நுழைந்தான்.

மஹாபலி சக்ரவர்த்தி பிராமணச்சிறுவனைப் பார்த்தார். அவனுடைய முகஅழகும் தேஹகாந்தியும் அவர் மனதைக் கவர்ந்தது. அவன் ஆத்ம தேஜஸ் முகஒளி அவருடைய மஹாகர்வத்தையும் அடங்கியிருக்கும்படிச் செய்தது.

அசுவமேதம் ஆய்விட்டது. அக்கிரபூஜையும் பிராமணர்களுக்கு தானம் கொடுத்தலுமே பாக்கி. இதுவும் இடையூறின்றி இனிது முடிந்துவிட்டால் இந்திரனுக்குப் பட்டம் போய்விட்டது நிச்சயந்தான். தேவலோகம் மஹாபலி கைவசமாய்விடும். "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்கிற சுருதிவாக்குப் பொய்த்து, "ஸர்வம் வலிமயம் ஜகத்" என்கிற நூதன வாக்குப் பிரபலமாய்விடும். தர்மம் தலைசாய்ந்து விட்டது. அதர்மம் தலை யெடுக்கத்தயாராயிருந்தது. அந்த சமயத்தில் வாமனரூபியான சிறுபையன் வந்து யாகசாலையில் சேர்ந்தான்.

மஹாபலி சக்ரவர்த்தி அவனைப் பார்த்தார். பார்த்த பார்வையில் அவனுடைய வசீகரசக்திக்கு உட்பட்டவராய், "பிராமணோத்தமரே! வாரும்! உமக்கு வேண்டியதைக் கேளும். இதோ தந்தேன் என்று தத்தம் செய்ய தீர்த்த பாத்திரமும் கையுமாகக் காத்துக்கொண்டிருக்கிறேன்" என்றார். "மஹா சக்ரவர்த்தியே நான் பிராமணச் சிறுவன். அதிலும் பிரமசாரி. எனக்கு என்ன வேண்டியிருக்கிறது! ஆயினும் பிக்ஷை யெடுப்பதை தீக்ஷையாக வகித்தவனுத

லால், என் காலடியால் மூன்றடி அளவு இடங் கொடுத்தால் நான் நியமநிஷ்டைகள் தவறாது யஜ்ஞம் செய்து வருவேன். அவ்வளவு உபகாரம் செய்தால் போதும்!" என்றான் பிராமணச் சிறுவன். பக்கத்திலிருந்த அசுரகுருவாகிய சுக்கராசாரியர் கவனித்தார். சிறுவனுடைய வாமனரூபத்தையும், அவனுடைய அளவற்ற தேஜஸ், காந்தியையும், அவன் முகவிலாசத்தையும் பார்த்தார். "ஓஹோ! இந்தக்குள்ளன் மஹா விஷ்ணுவே! இதில் ஏதோ மோசமிருக்கிறது!" என்று உன்னி, உடனே மஹாவலியின் காதில் உபதேசம் செய்வாராயினர். "உடல் சிறியானென்று மோசம் போகாதே! உள்ளே ஆளிருக்கிறான். அவனைப் பார்த்துப் பேசு!" என்று எச்சரித்தார்.

மஹாபலி சக்ரவர்த்தி குள்ளனை உற்று ஊன்றிப்பார்த்தார். இவன் ஏதோ அசாதாரணமான பேர்வழிதான் என்று கண்டுகொண்டார். ஆயினும் அஹத்தில் கர்வம்தலைக்கேறியிருந்தபடியால் மஹாவிஷ்ணுதரிசனம் அவருக்குக் கிடைக்கவில்லை.

"வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்பதிலுள்ள நம்பிக்கையை மாற்ற முடியவில்லை.

"நாம் உலகெலாம் ஜயித்த மஹாசக்ரவர்த்தி: இந்தச் சிறு பையனுக்கு பயந்து இப்படிப் பட்ட காலத்தில் அவன் கேட்டதைக் கொடுக்கப் பின்வாங்கி யஜ்ஞத்துக்குப் பங்கம் விளைக்கலாமா!" என்று யோசித்தார் சக்ரவர்த்தி.

என்ன செய்வான்! கொடுத்தாலும் சங்கடம்; 'தேஹி' யென்றவனுக்கு 'நாஸ்தி' யென்று சொன்னாலும் அழியாத அபகீர்த்திக்காளாவன். இப்படி இருவிதத்திலும் சங்கடம். இதற்குத்தான் "தர்மசங்கடம்" என்று சொல்கிறது.

இந்த தர்மசங்கடத்தில், மஹாவலி சக்ரவர்த்தி ப்ரஹ்லாதன் வம்சத்திலுதித்தவனாதலால், ஸத்தியத்தை விட்டுப் புரள இஷ்டப்படவில்லை.

"மஹாவிஷ்ணுவாகவேயிருந்தாலும், 'மஹாவிஷ்ணுவுக்குப் பிச்சை கொடுத்தான்' என்கிற கீர்த்தியொன்றே போதும். திரிலோகாதிபதியின் மகுடத்தைவிட அந்தக் கீர்த்தி பெரிதாய் விளங்கும்" என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டு "சுவாமி! அப்படியே! இதோ மூன்றடி மண் தத்தம் செய்தேன்" என்று ஓம் என்கிற பிரணவத்தை உச்சரித்து தாரை வார்த்துக் கொடுத்தான். (படத்தைப்பார்க்க.) அவன் உள்ளம் அடங்காமகிழ்வடைந்தது.

பிராமணச் சிறுவன் முகம் சுருங்கியது!

"ஸ்வாமி, யேன் முகம சுருங்கியிருக்கிறது"? என்று கேட்டான் மஹாபலி சக்ரவர்த்தி.

அதற்கு பிராமணச் சிறுவன்:—"வாயால் கொடுத்தேன் என்று சொல்லி தாரை வார்த்து இலகுவாய் தத்தமும் செய்துவிட்டீர். நீரோ மஹாபலி சக்ரவர்த்தி. நானோ பிராமணச் சிறுவன். உம்மிடத்திலிருந்து நீர் கொடுத்த தானத்தை நான் கைப்பற்றி ஸ்வாதீனப்படுத்திய பின்னல்லவோ என் காரியம் முடிந்ததாகும்! 'அரசன் பகை ஆபத்து விளைக்கு'மென்பர்,—காரியமோ விட்டுக் கொடுக்கத்தக்கதாகவில்லை!—இதையெல்லாம் சிந்திக்க முகம் வாட்டம் கொடுக்காதா?" என்று கேட்டான்.

"ஸ்வாமி! மஹாபலி பொய்சொல்லமாட்டான். அந்த சிந்தனையொன்றும் வேண்டாம். உங்கள் சொத்தை உடனே கைப்பற்றிக்கொள்ளுங்கள்" என்றான் மஹாசக்ரவர்த்தி.

பிராமணச் சிறுவன் "ஆனால் சரி, நான் அடி போட்டு அளக்கலாமா" என்று கேட்டு அந்தர்முஹமானார். உடனே அவர் விசுவரூபமாய் விளங்கக் கண்டான்.

பூமத்திய பாதாளமெல்லாம் அவருடைய ஒரு கால் மூடிக்கொண்டது. அந்தரிக்ஷமெல்லாம் அவர் தேஹமாக, மற்றொரு காலடியால் தேவலோகத்தையெல்லாம் ஒன்றாக அளந்துவிட்டார். நான்முக பிரம்மா அவர் பாதத்தை அர்க்கியபாத்திய உபசாரங்களோடு பூஜை செய்தார், (படம்பார்க்க.)

"மஹாராஜாவே, இரண்டடி யளந்தாய்விட்டது. மூன்ருவதடி அளக்க அடியை எங்கே வைக்கிறது?" என்று கேட்டார்.

மஹாபலி ப்ரஹ்லாதாழ்வார் ஆசீர்வாத பலத்தால், "ஸ்வாமி அடியேன் சிரஸில் வைத்தருள்க" வென்று தலையைக் காட்டினன்.

விஷ்ணுவும் அவன் சிரஸில் காலை வைத்து ஸ்ரீதளலோகம்போய்ச்சேரும்படி யழுத்திவிட்டார்.

உலகில் இந்திரனுக்கு பயம் தீர்ந்தது. தர்மம் நிலைநாட்டப் பெற்றது. வலியே பெரிதென்கிற வல்லடி வழக்கு ஒழிந்தது. உலகெலாம் புரக்கும் தர்ம ரக்ஷணகாரியம் முடிந்தது. ஆபத்துக்காலத்திலும் ஸத்தியம் தவருத உத்தமசீலனை விட்டுப் பிரிந்திருக்க அவருக்கு மனங்கொள்ளவில்லை. ஆகையால் உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டிவிட்டு தானும் ஸ்ரீதளலோகத்துக்குச்சென்று அங்கே தபஸ் செய்து கொண்டிருந்த மஹாபலிக்குத் தரிசனம் தந்து "அப்பா அடுத்த இந்திரப்பட்டம் உனக்கே உரியது" என்று அபயம் கொடுத்துவிட்டு, அவனுக்கு துவாரபாலகனுயிருக்கும் தொழிலிலமர்ந்தார்.

பார்த்தால் இதுவெல்லாம் ஒரு பெருங்கதை. உளக்கண்ணுல் பார்த்தால் எல்லாம் ஸநாதந தர்மமன்றி வேறென்றுமில்லை. இந்த ஸநாதநமான தர்மம் ஒன்ருஹும் ஒருபோதும் கெடுவதில்லை. "தர்மமே ஜயம்" என்பதற்குச் சந்தேகமில்லை. இதை 'பென்ஜாமின் கிட்' என்பவர் வெகு அழகாய் எடுத்துக் கூறி இந்தப் பாரத மஹாயுத்தத்துக்கு இந்த தர்மம் பொருந்துமென்று காட்டியிருக்கிருர். அதை அப்படியே இங்கிலீஷில் எடுத்துக் காட்டியிருக்கிருேம். (வி. சி. யு. 78-வது பக்கம் பார்க்க.)

---

## THE HISTORY OF THE POLES IN RELATION TO THEIR NEIGHBOURS.—(*Continued.*)

## போலண்ட் ராஜ்யமும் போல்ஸ் ஜாதியாரும்.

(291-வது பக்கத் தொடர்ச்சி.)

### INDUSTRIALISATION OF RUSSIAN POLAND.

### ருஷியன் போலண்டின் தொழில் விர்த்தி.

ருஷியாவின் கீழுள்ள போலண்டில் இரும்புக்கனிகளும், நிலக்கரியும் ஏராளமாக விருக்கின்றன. இவை சம்பந்தமாக ஒரு பெரிய வியாபாரம் ஏற்பட அதற்கு மூலஸ்தானமாக வாயது ருஷியன் போலண்ட். இது மூலமாக இப்பொழுது புத்திசாலிகளான ஒரு மத்திய வகுப்பாரும், வேலைக்காரர்களாய்க் கைதேர்ந்தவர்களான தொழிலாளிகள் வகுப்பாரும் உண்டாயிருக்கிருர்கள். பூர்வத்தில் நிலஸ்வான்களும் பயிரிடுங்குடிகளுமாகவிருந்தவர்கள் மறைந்து இப்பொழுது நடுத்தர வியாபாரிகளும், கணக்கர், வர்த்தகர்களும், தொழிலாளிகளுமான பேர்கள் தலையெடுத்திருக்கிருர்கள். இவர்கள் வர்த்தக வியாபாரத்தின் விர்த்தியினிமித்தம் ருஷியாவை யனுசரிக்கவும், ருஷியர்கள் இரும்பு, நிலக்கரி இவைகள் வாங்க வேண்டியதின் பொருட்டு போலண்டோடு ஐக்கியமாய் கூட்டுறவு கொண்டாடவும் நேர்ந்திருக்கிறது. இதனுல் இருகரத்தாருக்கும் மனவொற்றுமை ஏற்பட்டு, பரஸ்பரம் வியாபார நம்பிக்கையும் விசுவாசமும் உண்டாகலாயிருக்கிறது. 1870-ம் வருஷத்தில் ப்ரான்ஸ் தோல்வியடைந்தபின் 'அக்ரமஅழிச்சாட்டிய' நடபடிக்கைகளால் (Revolutionary tactics) காரியஸித்தி பெறலாமென்னும் நம்பிக்

கை குறைந்துவிட்டது. இப்படியாக, பொது நலசித்தம் விர்த்தியாகவும், பேதபுத்தி க்ஷீணித்துப்போகவும், ஆள்வோர் ஆளப்படுவோர் இருவருக்கும் பரஸ்பர நம்பிக்கை யுண்டாகி வளர்ந்து, இப்பொழுது ருஷியன் டியூமா (Duma) என்னும் துரைத்தனப் பிரதிநிதி சபையில் போல்ஸ் ஜாதியார் மெம்பர்களாகி "நாஷனல் டெமொக்ராடிக் பார்டி" யென்று சொல்லும் கக்ஷியாகி ருஷியர்களில் தாராள சித்தமுடையவர்களோடு சேர்ந்துழைப்பவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் ருஷியாவுக்கு அந்யமாயிருந்து ஸ்வதந்தரம் நாடாமல், ருஷ்யாவிற்குள்பட்டுத்தானே யிருந்து 'அக்ரம அழிச்சாட்டிய' வழிகளில் பிரவேசிக்காமல் சமாதானமாகவே ஸ்வய ஆட்சி சுதந்தரங்கள் பெற்று அது மூலமாக ஸ்வஜாதீய ஜனங்கள் ஒன்று சேர்ந்து ஒரு மனப்பட்டு பொதுஜன க்ஷேமார்த்தம் பொதுஜன அதிகாரம் பெற்று வாழ முயற்சித்து வருகிறார்கள். ருஷியா கவர்ன்மெண்டார் இது வரையில் இவர்களுடைய நோக்கத்துக்கனுகூலமாக விருப்பதாகக் காட்டவில்லை. போல்ஸ் ஜாதியார் டியூமா சபையில் மெம்பர்களான அவர்களினத்தார் எல்லாரும் ஒற்றுமையாக ஒருமனப்பட்டு நடந்துகொண்டதால் அதிக செல்வாக்குள்ளவர்களாயிருந்தார்கள். இவர்கள் இப்படி செல்வாக்கு மிகுந்தவர்களாகவே ருஷிய கவர்ன்மெண்டார் இவர்களுடைய முயற்சி பயன்படாதொழியவென்று இவர்களுடைய பிரதிநிதிகள் தொகையை ஒன்றுக்குப் பாதியாகக் குறைத்துவிட்டார்கள். ருஷியா மந்திரியாகிய M. ஸ்டோலிபின் (M. Stolypin) அவர்களுடைய ஏற்பாட்டை நன்றாகக்கவனித்து ஆலோசித்தபின் 'அதற்கு இணங்க முடியாது' என்று சொல்லிவிட்டார். ருஷியாவில் தாராளசித்தமும் விசாலமனமுமுள்ளவர்கள் போல்ஸ் ஜாதியாரை அனுசரணையாகவே நடத்தி முன்னுக்குக்கொண்டு வரவேண்டுமென்று அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய மனோபீஷ்டத்தை கவர்ன்மெண்டார் உணர்ந்து அவர்கள் மனமொப்ப நடக்கும்படிச்செய்ய அவர்களுக்குத் தருணம் வாய்க்காமலிருந்தது. இந்த "நாஷனல் டெமொக்ராட்" கக்ஷியைச் சேர்ந்தவர்கள் உண்மையாகவே ருஷியராஜ்யத்தில் சேர்ந்திருக்கப்பிரியப்பட்டவர்கள் என்பதும் ருஷ்ய சக்ரவர்த்திபதிகாரத்திற்குள்பட்டிருக்கப் பிரியப்பட்டவர்களென்பதும் ருஷியாவுக்கும் ஜபானுக்கும் நடந்த சண்டையில் ருஷியர் தோற்றுப்போனபின், ருஷியாவில் நடந்த கலகக்காலத்தில், போலண்டில் யாதொரு கலகமுமின்றி அமைதியும் சமாதானமும் மேலிட்டிருந்ததை அத்தாக்ஷியாகக் கூறப்படுகிறது. (ஆகஸ்டு மாஸம் 15-ந்தேதியில் பிறந்த இராஜ விளம்பரத்தின் அர்த்தம் இப்பொழுது விளங்குவதாகுமென்று நினைக்கிறோம்.) அந்த விளம்பரம் பிறப்பித்தவரான ருஷிய முக்கிய சேனாதிபதி க்ராண்ட் டியூக் நிகோலாஸ் அவர்களுடைய படத்தை இச்சஞ்சிகையின் மற்றோரிடத்தில் பிரசுரிக்க காணலாம்.) இவர்கள் ஸ்திதி இப்படியாக ப்ரஷ்யன் போலண்டின் ஸ்திதியைப்பற்றிச் சிறிது விசாரிப்போம்.

## ப்ரஷியாவின் கீழுள்ள போலண்டு.
## (Prussian Poland)

"பிஸ்மார்க் செய்த சதியோசனை."

பிஸ்மார்க் ஸெண்ட்பீடர்ஸ்பர்கில் ஜெர்மன் தூதராயிருந்த காலத்தில் போல்ஸுக்குச் செய்த அபகாரத்தைப்பற்றிச் சொன்னோம். அவர் 1870-ம் வருஷம் வரையில் சண்டை மும்முரத்திலிருந்து விட்டார். 1871-ம் வருஷத்தில் "ஜெர்மன் எம்பையர்" ஸ்தாபகமானபின் அந்த வேலையில் மும்முரமா யிருந்துவிட்டார். இருந்தாலும் போல்ஸ் விஷயத்தில் கவனம் வைத்தவராகவேயிருந்தார். 1848-ம் வருஷத்தில் ப்ரான்ஸில் (Revolution) "அக்ரம அழிச்சாட்டியம்" நடந்தபொழுது போல்ஸ் ஜாதியாரைக் கிண்டிவிட்டுக் கலகம் செய்தது ப்ரஷ்யா தான் என்கிறார்கள். பெர்லின் ஆயுதசாலையிலிருந்து ஆயுதங்களைக் கொண்டுவந்து இர

கஸியமாய்ப் போல்ஸ்பட்டாளம் ஒன்றுக்குக் கொடுத்துக் கலகம் செய்யத்தூண்டிவிட்டதாகச் சொல்கிறார்கள். இங்கே யிவர்களைத் தூண்டிவிட்டு, ருஷியாவின் பயத்தைக்கிளப்பி விட்டு அதோடு சேர்ந்துகொண்டு போலண்டை அபகரிக்கச்செய்த தந்திரம் எப்படிப் பலித்ததென்று முன்னமே சொல்லியிருக்கிறோம். போல்ஸ் ஜாதியார் ப்ரெஞ்சுக்காரர்களைப்போல் குடியரசு துரைத்தனம் ஸ்தாபிக்க முயலுவார்களென்று ப்ரஷ்யாவுக்குத் தோன்றினதின்பேரிலே அவர்கள் செய்த வஞ்சகத்தாலும் மித்திரபேதத்தாலும் அடுத்துக்கெடுக்கும் தந்திரத்தாலுமே போலண்டு முற்றும் பகிர்ந்து பங்கிட்டுக் கொள்ளப்பட்டதென்று சொல்கிறார்கள்.

"துடையையும் கிள்ளி
தொட்டிலையும் ஆட்டினது."

பிஸ்மார்க் செய்த சூழ்ச்சி யென்னவென்றால் போல்ஸ் ஜாதியாரையும் இரகஸியமாய்க் கிளப்பிவிட்டு, ருஷியாவில் அவர்களுக்கு விரோதமாயுள்ள கக்ஷியையும் பலப்படுத்தி ஸ்லாவ்ஸ் ஜாதியார் ஒன்றுகூடச் செய்தமுயற்சியைக் கெடுக்கவேண்டுமென்பது. இதில் அவருடைய தந்திரம் பலிக்கவே, ப்ரஷியாவின் கீழுள்ள போல்ஸ் ஜாதியாரை யடக்க முயன்றார்.

"சதிபாதகம்."

அதற்காக அவர் செய்த சதியாலோசனை இரண்டு விதமானதா யிருந்தது. ஒன்று போல்ஸ் ஜாதியாருடைய செல்வத்தைக் குலைக்க யத்தனித்தது. மற்றொன்று அவர்கள் மனதையே மாற்றிவிடப் பார்த்தது.

முதல் சூழ்ச்சியை நிறைவேற்ற வேண்டி ப்ரஷியன் போலண்டிலுள்ள நிலசுவான்கள் தொகையைக் குறைக்க யத்தனித்தார்.

இரண்டாவது சூழ்ச்சி நிறைவேற பொது ஸ்தலங்களிலும் பொதுவிஷய சம்பந்தமான நடபடிக்கைகளிலும் பள்ளிக்கூடங்களிலும் போல்ஸ்பாஷையை உபயோகிக்கக்கூடாதென்று உத்தரவு செய்துவிட்டார்.

இவ்விரண்டு யோஜனைகளும் 1873ம் வருஷத்தில் தீர்மானத்துக்கு வந்தன. ஆயினும் 13-வருஷகாலம் இந்த ஏற்பாடு அமுலுக்கு வராமல் தானே கிடந்தது. காரணம் என்னவெனில் பிஸ்மார்க்குக்கு, வியாபார ஸ்வதந்தரத்துக்கு விரோதமாகச் செய்த முயற்சியை யடக்குவதிலும், ஜனஸமூகக் கட்டுப்பாடு செய்துகொண்டு கிளம்பிய சபைகளை அமுக்குவதற்காகச்செய்த நிர்ப்பந்த சட்டங்களை அமுலுக்குக் கொண்டுவருவதிலும் வேலை சரியாகவிருந்தது. இவைகளோடுகூட அவ்வேற்பாடுகளை நிறைவேற்றுவது லேசான பாடாகவில்லை. போல்ஸ் நாட்டிலுள்ள நிலசுவான்கள் நிலத்தை விலைக்கு வாங்கி ஜெர்மன் குடிகளை நிலசுவான்களாக நியமிக்க, பெருந்தொகை கைம்முதல் வேண்டியிருந்தது. நிலத்தைப்பிடுங்கிக்கொண்டுவிடப்பட்டவர்கள் போக மற்றவர்கள் தங்களுடைய ஸ்வபாஷையை மறக்கும்படிச்செய்து ஸ்வஜாதியபிமானமென்பது அற்றுப்போகும்படி செய்யப்பார்த்தார். இதைப்பற்றி அவர் செய்த பிரயத்தனங்களையும் அதன் பலனையும் பற்றிச் சற்று விசாரிப்போம்.

"ஆனைக்கும் அடிசறுக்கும்"

பிஸ்மார்க் மஹாபுத்திசாலிதான். ப்ரெடரிக் மூதுரையில் தேறிய தந்திரவாதியே. ஆனாலும் "மாமியாருக்கும் ஒரு சாமியார் உண்டு" என்பதை அவர் அறியவில்லை. இவருடைய தந்திரத்தையெல்லாம் பயன்படாமற் செய்யத்தக்க சக்தி யொன்றுண்டு என்பதை அவர் அறியவில்லை.

## Prussianisation Policy.

" கறுப்புநாயை வெள்ளைநாயாக்கச்
செய்தமுயற்சி"

மனிதன் செயற்கையில் என்ன தான் செயினும் இயற்கைக்கு விரோதம் செய்ய அவனாலாகாது. இது ஸநாதனமான தர்மம். இதை அதிகாரத்திலுள்ளவர்கள் அதிகாரக்கிறுக்கு தலைக்கேறியிருப்பதினால் அறிவதில்லை. தென்னிந்தியாவிலே ராயர் அப்பாஜி அரசாண்டகா

லத்தில் அவர் இப்படித்தான் முரட்டுத்தனமாய் இயற்கை விரோதமான காரியங்களைத் தன் அதிகாரவல்லமையினால் செய்து வருவாராயினர். அவருடைய மந்திரிகளெல்லாம் அவரிடம் எதிர்பேச அஞ்சி இந்த மூர்க்கனுக்குப் புத்தி சொல்வார் யார்? என்று நடுங்கியிருந்து விட்டார்கள். அப்பொழுது அவரிடத்தில் விதூஷகனாயிருந்த திருவாழ்த்தான் இராஜாவுக்குப் புத்திபுகட்ட ஒரு யுக்தி செய்தான். ஒரு அக்னிகுண்டம் நிர்மித்து அதில் தீவளர்த்து ஹோமம் செய்கிறபாவனை காட்டி ஒரு கறுப்பு நாயைக் குளிப்பாட்டி அதன் கழுத்தில் கயிற்றைக் கட்டியிழுத்துக்கொண்டு அக்னியை வலம் வந்து கொண்டிருந்தான். அரசன் பார்த்து என்னடாசெய்கிறாய்? என்று கேட்டபொழுது "கறுப்பு நாயை வெள்ளை நாயாக்கப்போகிறேன்" என்று சொன்னான். அரசன் "முட்டாளே! நாயின் நிறத்தை உன்னால் மாற்றமுடியுமா?" யென்று கேட்க, அவன் அரசன் செய்த அக்கிரமத்தைச் சொல்லி, "உங்களால் இயற்கை விரோதமான காரியம் செய்ய முடியுமானால் என்னால் ஏன் ஆகாது?" என்று கேட்டு புத்தி புகட்டினான். அந்த மாதிரி பிஸ்மார்க் செய்த அக்கிரமம் இயற்கை விரோதமானதால் பயன்படாதொழிந்தது.

ப்ரஷியன் போலண்டிலுள்ள நிலத்தை வாங்க ப்ரஷிய ஜனப்பிரதிநிதிசபையார் 1898-ம் வருஷம் வரையில் 24 கோடிபவுன் செலவிட அனுமதி கொடுத்தார்கள். இப்பொழுதுள்ள இரண்டாவது உவில்லியம் பட்டதுக்கு வந்த பின் பிஸ்மார்க்கை அவர் வீட்டுக்கனுப்பிவிட்டார். வேலை போன பிறகும் கூட இந்த ஏற்பாட்டை ஆதரித்துப்பேசி வந்தார் பிஸ்மார்க். இப்பொழுது இம்பீரியல் சான்ஸலராயிருக்கும் (பிரதான மந்திரி) ப்ரின்ஸ்வான் பூலோ அவர்கள் 1902-ம் வருஷத்திலும் கூட இது மிகவும் முக்கியமான அம்சமென்று பேசினார். 'கிழ்த்திசை மாகாணங்களில் ப்ரஷியர் குடியேறச்செய்வதற்கான ஏற்பாடு அதி முக்கியமான தாயிருப்பதன்றி நம் ஸ்வதேச க்ஷேமமும் அதைப் பொறுத்ததாயிருக்கிறது' என்று சொன்னார். இப்படி இவர்கள் ஒரே பிடிவாதமாய் போல்ஸ் ஜாதியாரை யடக்கிவிடச்செய்த பிரயத்தனங்களெல்லாம் என்னவாயிற்றுப் பார்ப்போம்.

"மாமியாருக்குமோரு சாமியார் உண்டு."

1906-ம் வருஷம் வரையில் மொத்தம் செலவில் 'ஸாங்ஷன்' கொடுக்கப்பட்ட 24 கோடி பவுனில் ஒன்றே முக்கால் கோடி பவுன் செலவு செய்துவிட்டார்கள். இவ்வளவு செலவு செய்ததற்குப்பலனாக 75-ஆயிரம் ஏகரா நிலம் போல்ஸாரிடமிருந்து ஜெர்மன்ஸ் வசம் வந்திருக்கிறது. போலண்டில் அவர்களுக்கு சொந்தமான "ஸெட்டில்மெண்ட் கமிஷன்" ஒன்றிருக்கிறது. அது நில பாங்கிமூலமாகவும் மற்ற ஐக்கிய நாணய சங்கங்கள் மூலமாகவும் (Co-operative Societies) வேலை செய்து வருகிறது. நல்ல லாபம் தரும்படியானது. இவைகளின் நடபடிக்கைகளினால் நிலத்தின் விலை மிகவும் அதிகரித்துவிட்டது. ஜெர்மன் நிலசுவான்கள் அக்கம்பக்கத்தார் பொல்லாப்புக்குட்பட்டுக்கொண்டு நிலத்தை வைத்துக்கொண்டு பிழைப்பதைவிட அதை போல்ஸுக்கு விற்றுவிடுவது லாபகரமாயிருக்கிறதென்று கண்டு விற்றுவிட்டுப் போய்விட்டார்கள். போல்ஸ் ஜாதியான் யாராவது ஜெர்மன்ஸுக்கு நிலத்தை விற்றானால் அவனையுடனே ஜாதிப்பிரஷ்டனாகத் தள்ளிவைத்துவிடுவார்கள். ஸெட்டில்மெண்டு உத்தியோகஸ்தர்கள் சாப்பிட்டது போக நிலம் வாங்கச் செலவு செய்த ஸர்க்கார் பணத்திற்குப் பலன் இந்த 75 ஆயிரம் ஏகரா நிலமும் ப்ரஷியாவின் கடன் தொகையில் கால் பங்கு செலவழிந்ததும்தான் மிச்சம். ஸர்க்காரார் பொதுஜன விரோதம் செய்யத் துணிந்தால் அது எப்படியோ பயன்படாதொழியும் என்பது திண்ணம். ஏனெனில் பொதுஜன ஸம்மதமில்லாதபோது 'ஸர்க்கார்' என்கிற பேரேயில்லை. ஸர்க்கார் உத்தியோகத்திலிருப்பவர்கள் அக்ரமமாக ஸர்க்கார் அதிகாரத்தைச் செலுத்தமுயன்றால் "மாமியாருக்கும் ஒரு

சாமியார் உண்டு" என்கிற கதையாகத்தான் முடியும். நிலத்தைப் பிடுங்கச் செய்த பிரயத்தனம் இப்படியாகப் பயனற்றதாக அவர்கள் ஸ்வபாஷையை யடக்கச்செய்த முயற்சியின் கதி யென்னவாயிற்றென்று பார்ப்போம்.

"நான் அது செய்யமாட்டேன்."

"கொட்டுக்கோடாலி பாரைக்கும் மூன்றிற்கும் இஷ்டம் வலிதென்பர்." இந்த இஷ்டம் (Cultivated Will) ஈசன் அருளேயாகும். இதற்கு விரோதம் செய்யும் மனுஷப் பிரயத்தனம் பலிக்காது. ப்ரஷியா இப்பொழுது பெரிய இராஜ்யமாகிவிட்டது. அதன் அரசன் ஜெர்மனி இராஜ்யத்துக்கெல்லாம் சக்ரவர்த்தியாயிருப்பவர். "எத்தால் வாழலாம் ஒத்தால் வாழலாம்" என்கிற மூதுரையை அனுசரித்து ப்ரான்ஸைத் தோற்கடித்துவிட்டார். ஐரோப்பாவெங்கும் பிரபலப் பேர்பெற்று நிகரற்ற செல்வம் படைத்துவிட்டார். இப்படிப்பட்ட இராஜாங்கத்தார் "தர்மமே ஜயம்" என்கிற உண்மையறியமாட்டாமல் அதிகாரக் கொழுப்பினுல் அவர்கள் குடைக்கீழ் வசிக்கும் ஒரு தேசக் குடிகளின் பூர்வீகமான பாஷையை அவர்கள் சொந்த தேசத்தில் தானே வழங்காதபடி செய்யத் தீர்மானித்து விட்டார்கள். தீர்மானித்தபடி தாக்கீதும் பிறப்பித்து விட்டார்கள். ஸ்கூல் அதிகாரிகளுக்கெல்லாம் உத்தரவு போய்ச் சேர்ந்தது. ஸர்க்கார் உத்தரவை அமுலுக்குக் கொண்டுவரவேண்டி மறுநாட்காலமே பள்ளிக்கூடங்களில் எல்லாம் காலை வந்தனம் ஜெர்மனி பாஷையில் சொல்ல ஏற்பாடாகிவிட்டது. பள்ளிக்கூடங்களெல்லாம் திறந்தாயிற்று. பிள்ளைகளும் பள்ளிக்கு வந்துவிட்டார்கள். காலையில் பாடம் ஆரம்பிக்கவேண்டும். காலைவந்தனம் (பிரார்த்தனை) செய்யாமல் பாடம் ஆரம்பிக்கக்கூடாது. பள்ளிக்கூட வாத்தியார்கள் ஜெர்மனி பாஷையில் பிரார்த்தனையை எழுதிச் சொல்லும் படிகுழந்தைகளுக்குத் தாக்கீது செய்தார்கள். 50-ஆயிரம் குழந்தைகள் நாடெங்கும் ஒருமனதாய் "நான் அது செய்யமாட்டேன்" என்று விட்டார்கள். ஐரோப்பாகண்ட முழுவதும் இந்தச் செய்தி பரவிவிட்டது. இதர இராஜாங்கத்தாரெல்லாம் இதைக் கேட்டுச் சிரிப்பும் வெறுப்பும் கொண்டார்கள்.† குழந்தைகளை யென்ன செய்கிறது! ஒரு பெரிய கவர்ன்மெண்டார் இப்படி யோசனையின்றி நடந்து கொண்டதற்காக எல்லாரும் வருத்தப்பட்டார்கள். சர்க்கார் சட்டம் குழந்தைகளின் இஷ்டத்துக்கு விரோதமாகப் பலிக்கவில்லை!

ஆணைப் பெண் வசியமாக்கிய அனுபவம்.*

ஒஸ்ட்மார்க் என்னும் ஒரு டிவிஷனில் மட்டுமுள்ள போல்ஸ் ஜனங்களின் தொகை 1890-க்கும் 1900-க்கும் இடையிலுள்ள 10-வருஷகாலத்தில் 100-க்கு $10\frac{1}{2}$ அதிகமாகப் பெருகிற்று. 1900-வருஷம் முதல் போல்ஸ் ஜாதியாரின் பார்லிமெந்து சபை மெம்பர்கள் நியமன 'வோட்டுகள்' தொகை 1903-ல் 342,783-ஆகவிருந்தது. 1907-ல் 453,764-ஆக விருத்தியாயிற்று. ஜனஸமூகத்தில் போல்ஸ் ஜெர்மன்ஸுக்குப் பின் வாங்கினவர்களாகவில்லை; அந்தஸ்திலும் குறைந்தவர்களாகவில்லை. ஜெர்மனியிலிருந்து படித்தவர்கள் போலண்டுக்கு ஜீவனார்த்தம் பிழைப்புத்தேடிவந்தால் அவர்களை

† "All Europe was amused and pained at the spectacle of a great kingdom like Prussia fuming and fulminating with rage while 50,000 School children upset the whole course of law by refusing to say their prayers in German!"—"1912? *Germany & Sea Power.*" *by Archibaldd R. Colquhoun.*

* "Intermarriage means that the children, almost invariably, are brought up with Polish ideas." "Experience teaches," says Bismarck, "that a Polish wife makes her husband a Polish patriot in the twinkling of an eye." In short, we find this extraordinary anamoly by no means rare, however—that the conquered race is proving stronger than its conqueror.—"1912? *Germany and Sea Power*" *by A. R. Colquhoun.*

ஜாதிக்கட்டுப் பாட்டினால் ஒதுக்கிவைக்கிற வழக்கத்தால், போல்ஸ் ஜாதியிலே மத்திய வகுப்பார் கிளம்பி நல்ல ஸ்திதியிலிருந்து வருகிறார்கள். நிலத்தைப் பிடுங்கவும் குழந்தைகளை நிர்ப்பந்தப்படுத்தவும் தான் முடியவில்லையே, விவாக சம்பந்தத்தினால் போல்ஸ் ஜாதியாரை ஜெர்மன்ஸாகச் செய்துவிடலாமென்றும் பார்த்தார்கள். அதுவும் பலிக்கவில்லை. பிஸ்மார்க்தானே சொல்கிறார்:— "அனுபவ ரீதியாகப்பார்த்தால் போல்ஸ் ஜாதி மனைவி அவளுடைய புருஷனைக் கண்ணிமைப் பொழுதில் போல்ஸ் தேசாபிமானி யாக்கிவிடுகிறாள்." ஐயோபாவம்! அவர் என்ன செய்வார்! போல்ஸ் ஜாதிப்பெண்களின் கண்களைப் பிடுங்கிவிட்டு அவர்களை ஜெர்மன்ஸுக்கு விவாகம் செய்து கொடுக்கும்படியான சூழ்ச்சி செய்பத்துணிவு வரவில்லை! கூடுமானால் அதையும் செய்து பார்த்திருப்பார்! அதுவும் பலிக்காதென்று அவருக்குத்தெரியும். வீணாகக் கதையை வளர்த்துவானேன். ஜெயித்தவர்களைவிட ஜெயிக்கப்பட்டவர்கள் வல்லாளகண்டர்களாயிருக்கிறகாட்சியை இங்கே யெல்லாரும் காணலாம். இது அதிர்சயமாக விருக்கலாம்: தோரணைக்கு முரணாகவுமிருக்கலாம். ஆனால் இது உண்மையானதென்பதை ஐரோப்பா முழுவதும் அறிந்திருக்கிறது. தேஹ பலத்திலும் மனோபலம் பெரியது. தேஹ மனோபலத்திலும் புத்திவன்மை பெரியது. தேஹ-மனோ-புத்திவலிமையிலும் இம்மூன்றும் ஒன்று சேர்ந்த வலியிலும் "இஷ்டம்" வலிது. ஏனெனில் இது ஈசன் அருளோடு ஒன்றுபட்டிருப்பதினாலென்க.

### "The Historic Mission of Prussia"
### ப்ரஷியாவின் கடைப்பிடி நோக்கம்.

ப்ரஷியாவுக்குக் கீழ்ப்பட்ட போலண்டை "கறுப்புநாயை வெள்ளை நாயாக்கப்பார்த்த திருவாழ்த்தான் மாதிரி" போல்ஸ் ஜாதியின் வாசனையறவும் ஜெர்மன்ஸ் வாசனை படியவும் செய்யவேண்டு மென்று முயன்றதெல்லாம் பலிக்காமற்போக, இப்பொழுது புதிதாய் ஒரு சட்ட நிர்ப்பந்த முண்டுபண்ணி போல்ஸ் நிலங்களைப் பிடுங்கி ஜெர்மன்ஸுக்குக் கொடுக்க யோஜித்து வருகிறார்கள். இந்த மசோதா சட்டமாகவும் செய்யப்பட்டிருக்கிறது. இதை அமுலுக்குக் கொண்டுவரவேண்டிய தொன்றுதான் பாக்கி. இந்த முறையை ப்ரஷியாவின் "நாஷனல் முறை"யாகச் சொல்கிறார்கள். இதை வெகு ஊக்கத்தோடும் விடாமுயற்சியோடும் கடைப்பிடிப்பாகப் பிடித்து நிறைவேற்றக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். இந்தச் சட்டமுண்டு பண்ணினதற்குக் காரணம் ஜெர்மன் ஜாதியாரை அங்கே நிலசுவான்களாக்க வேறுவிதியில்லாமல் இப்படிச் செய்யவேண்டியதாயிற்றென்று ப்ரின்ஸ் வான் பூலோ சொல்லியிருக்கிறார். ஜெர்மனி சக்ரவர்த்தியும் 1907-ம் வருஷம் ஜனவரி மீ 7வ ப்ரஷியாவின் ஜனப்பிரதிநிதிசபையைத் திறக்கும்பொழுது செய்தபிரசங்கத்தில் "இது ப்ரஷியாவின் கடைப்பிடி நோக்கமாயிருக்கிறது" என்று சொல்லியிருக்கிறார். இப்படி நிர்ப்பந்தித்தாலும் காரியம் நிறைவேறாது என்கிறார்கள் போல்ஸ் ஜாதி அபிமானிகள்,

### GERMAN POLICY TOWARDS THE SLAVS.
### ஜெர்மன்ஸ் ஸ்லாவ்ஸ் ஜாதியாரை நடத்துமுறை.

ஜெர்மன்ஸ் ஸ்லாவ்ஸ் ஜாதியாரை இப்படி நடத்துமுறை யனுஷ்டிக்கலானது ஏன் என்றால் அதற்குக்காரணம் வேறு. அது என்னவெனில்:—

"மூக்கரையன் கதையான சூழ்ச்சி."

ப்ரஷியாவின் கீழ் எல்லை 750-மைல் தூரத்துக்கு மலைத்தொடர், நதியோட்டம் முதலிய இயற்கையான பிரிவுகள் ஒன்றுமின்றி பள்ளத்தாக்கு நிலத்தில் ருஷியாவின் எல்லைக்கு ஒட்டினதாக விருக்கிறது. இது போதாதென்று ருஷ்யநாட்டில் ஒருபாகம் முளையடித்தது போல் பெர்லினுக்கு 180-மைல் தூரத்தில் பாய்ந்து நிற்கிறது. இப்படி இயற்கையான காவல் ஒன்றுமில்லாமலிருக்கிற எல்லையை அரண்

செய்யவென்று அங்கங்கே அரண் செய்யப் பெற்ற கோட்டைகளை ஸ்தாபித்திருக்கிறார்கள். இந்தக்கோட்டைகள் சண்டைக்காலத்தில் பலந்தருவதாயிருக்க இவைக்குப் பின்னாலிருக்கும் நாடுகள் பந்தோபஸ்துக் கொடுப்பதாயிருக்கவேண்டும். இங்கேதான் போல்ஸ் ஜாதியார் இருக்கிறார்கள். அந்த நாட்டுவாசிகள் விரோத சித்தமுடையவர்களாயு மிருக்கிறார்கள். அவர்களை அங்கிருந்து கிளப்பவும் முடியவில்லை. ஜெர்மன்ஸ் ஆக மாற்றவும் முடியவில்லை. பகைவர் படையெடுக்கும் காலத்தில் இவர்கள் பேராபத்து விளைப்பவர்களாயிருப்பார்கள். ப்ரஷியாவின் கீழுள்ள போல்ஸ் ஜாதியாரைத் திருப்திசெய்யவேண்டின் அவர்கள் கட்டிக்கொண்ட நாடுகளைவிட்டுக் கொடுக்கவேண்டுமென்றுணர்ந்து, பிஸ்மார்க் தந்திரமாகச் சூழ்ச்சிசெய்து மூக்கரையன் கதைபாக ருஷியாவின் கீழுள்ள போல்ஸ் ஜாதியார் நல்ல ஸ்திதிக்குவராமலும் ருஷியா கவர்ன்மெண்டார் அவர்களுக்கு அனுகூலமாயில்லாத படிக்கும் செய்துவந்தார். அதுமுற்றும் பலித்துவிட்டது.

### "தன்வினை தன்னைச்சுடும்."

### "One Reaps as one Sows."

"தன்வினை தன்னைச் சுடும்" என்பது ப்ரஷியா விஷயத்திலுண்மையாயிற்று. அவர்கள் சூழ்வினையெல்லாம் இப்பொழுது அவர்களுக்கே ஆபத்தாக முடிந்திருக்கிறது.

பூர்வத்தில் ருஷியாவை ஸ்லாவ்ஸ் ஜாதிக்குத் தலைமையாக வைத்துக்கொண்டு ஸ்லாவ்ஸ் ஜாதியார் ஒன்றுகூடப் பிரயத்தனம் செய்யலாமென்று நினைத்தார்கள். இது பால்கன்ஸ் நாடுகளையெல்லாம் ருஷியாவின் ஆளுகைக்குள் கொண்டு வருவதாயிருக்குமென்று அனேகர் இதற்கிணங்கினார்களில்லை. மேலும் ஸ்லாவ்ஸ் ஜாதியைச்சேர்ந்த பலதேசத்தாரும் 'ஒருவருக்கொருவர் விரோதமாய் பொறாமை பாராட்டிக் கொண்டிருக்கிறபடியால் இவர்களெல்லாரும் ருஷியாவை யழைக்க உடன் படமாட்டார்கள். இப்பொழுது ஸ்லாவ்ஸ் ஜாதியார் எல்லாரும் சேர்ந்து ஒரு ஐக்கிய கட்டுப்பாட்டுக்குள்பட்டு கவர்ன்மெண்டுகள் வேறுபடினும் ஸ்வஜாதியபிவிர்த்தி நோக்கத்தில் ஒன்றுபட்டுழைக்குக்கருதி 'பான்-ஸ்லாவ் முயற்சி' செய்து வருகிறார்கள். அதாவது "ஸ்லாவ்ஸ் எல்லாம் ஒன்று" என்கிற லக்ஷியம் கொண்டுழைக்கத் தலைப்பட்டிருக்கிறார்கள். நாகரிகத்திலும் ஜனஸமூகவிர்த்தியிலும் ருஷியாவின் தலைமையை ஒப்புக்கொள்ளாதவர்களும் இப்பொழுது கிளம்பியிருக்கும் நவமான ஸ்லாவ்ஸ் முயற்சியில் (Neo-Slavism) ஈடுபட்டுழைக்க ஆக்ஷேபனையிராது.

### "ஸ்லாவ்ஸ் நவஜனமுயற்சி."

### "Neo-Slav Movement." †

இந்த ஜனமுயற்சி (Movement) பொஹிமியாவில் உற்பத்தியாகி இராஜாங்க ஸ்வதந்திரத்தை அவ்வளவாகப் பாராட்டாமல் ஸ்வஜாதியவிர்த்தியையும், ஸ்வபாஷா விர்த்தியையும், ஸ்வஜனாபிவிர்த்தியையுமே பிரதமமான நோக்கங்களாகக் கொண்டுள்ளதாயிருக்கிறது. இந்த ஏற்பாட்டினால் எந்த தேசத்தின் அந்தஸ்துக்கும் குறைவுவர நிமித்தமில்லை. இதைப் பிரேரேபித்து வேலை செய்து வருகிறவர்கள் ருஷியாவின் உத்யோகஸ்தர்களாகவின்றி ஸ்லாவ் ஜாதியாரின் பூர்விக ஸ்தானமாகிய பொஹிமியாவிலுள்ள பொதுஜனப்பிரமுகர்களாயிருக்கிறார்கள். ருஷியாவில் 'லிபரல்' கக்ஷியார் இதற்கு அனுகூலமாக விருக்கிறதாகத் தெரிவித்திருக்கிறார்கள். ஸ்லாவ்ஸ் ஜாதித் தலைவர்களும் ருஷ்ய ராஜ்யத்திற்குள்ளிருந்து தானே போலண்ட் ஸ்வஜாதீய ஸ்வதந்திர மனுபவிக்கப்பெற்றால் போதுமென்று தெரிவித்திருக்கிறார்கள்.

† "A Bohemian delegate to the second Neo-Slav conference told his Russian hearers that Justice to the Poles is essential to Slav Unity and progress."—A. R. Colquhoun in the Royal Colonial Institute Journal.

"கழுத்துக்குக் கயிறு."

இது ப்ரஷியாவுக்கு கழுத்துக்குக்கயிறு கொடுத்ததுபோல் இருக்குமென்பதிற் சந்தேகமில்லை. இதையெல்லாம் ஆரத்தீர அமர்ந்து விசாரித்துணர்ந்து படத்தில் இந்த தேசங்களிருக்கிற ஸ்தானத்தையும் இருப்பையும் நுட்பமாய்ப் பார்த்துணர்ந்தால், ஆகஸ்டுமாஸம் 15-தேதியன்று ருஷியசேனாதிபதி Grand Duke Nicholas) பிறப்பித்த இராஜ விளம்பரத்துக்கும் அதை யொட்டி வந்த ருஷிய சக்ரவர்த்தியின் தீர்மானத்துக்கும் அர்த்தம் இன்னமாயிருக்கலாமென்று புத்திசாலிகள் ஊகித்தறிந்து கொள்ளலாம்.

கீழ்ண்டைப் போர்க்களத்தில் ருஷியர் வெற்றி.

ருஷியா இப்பொழுது போலீஸ் நாடுகள் ஸ்லாவ்ஸ் நாடுகள் பலவற்றைப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள். ப்ரஷியாவின் கீழ்புற எல்லையில் ருஷியர்கை யெங்கும் வலுத்திருக்கிறது. ஆஸ்திரியா ஏற்கனவே கைசளைத்துப் போய்விட்டதாக சமாசாரம். ஜெர்மன்ஸ் பெல்ஜியத்தைப் பிடித்துக்கொண்டு ப்ரான்ஸ் எல்லைக்குள் சென்றவர்கள் திரும்பித் துரத்தப்பட்டு வருகிறார்கள். பெல்ஜியத்தை இராஜாங்கத்தார் அனுசரிக்கும் தர்ம விதிக்குமுரணாக்காரணமின்றி புகுந்து பாழடித்துப் பிடித்துக்கொண்டபின், ஜெர்மன் சக்ரவர்த்தி தன்னை "பெல்ஜியன் அரசராக" சண்டையில் சம்பந்தப்படாத தேசங்கள் ஒப்புக்கொள்வார்களாவென்று விசாரித்து வருகிறாராம். இதுவும் ஒரு விந்தைதான். இவ்வளவோடு சண்டைக்காரர்களில் முக்கியமான ஜேர்மன்ஸ், ஸ்லாவ்ஸ் இவர்களுடைய பூர்வோத்தர சரித்திரத்தை விசாரித்து அது விஷயமாய் அறிந்து கொள்ள வேண்டியவைகளைச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தோம்.

**FIELD MARSHAL SIR JOHN FRENCH.**
**THE WESTERN THATRE OF WAR.**

பீல்ட்மார்ஷல் ஸர்ஜான் ப்ரெஞ்சு அனுப்பிய 4-வது ரிபோர்ட்டு. மேலண்டைப் போர்க்களம்.



FIELD-MARSHAL SIR JOHN FRENCH
COMMANDER-IN-CHIEF OF THE BRITISH EXPEDITIONARY FIELD FORCE.

பீல்ட்-மார்ஷல் ஸர் ஜான் ப்ரேஞ்சு.
ப்ரான்ஸிலுள்ள ப்ரிடிஷ் சைனியங்களுக்கு முக்கிய ஸேனாதிபதி.

ப்ரான்ஸிலுள்ள ப்ரிடிஷ் சைனியங்களுக்கெல்லாம் முக்கிய ஸேனாதிபதியாகிய பீல்ட்-மார்ஷல் ஸர்ஜான் ப்ரெஞ்சு அவர்கள் அனுப்பிய 4-வது ரிபோர்ட்டு நவம்பர்மீ 20உ யிட்டுள்ளது. அங்கே சண்டைபோடும் கூட்டாளிகள் சைனியங்களுக்கெல்லாம் தலைவர் ஜெனரல் ஜாப்ரே. இவர்தான் ப்ரெஞ்சு ஸைனியங்களுக்கெல்லாம் முக்கிய ஸேனாதிபதி பெல்ஜியத்திலிருந்து பீரிடிஷ் சைனியங்களையும் ப்ரெஞ்சு சைனியங்களையும் ஸீன் நதியின்

தென்கரை வரையில், பின்வாங்கிச் செல்ல ஏற்பாடு செய்தவர் இவரே.



GENERAL JOFFRE COMMANDER-IN-CHIEF OF THE ALLIED FORCES IN FRANGE.

ஜெனரல் ஜாப்ரே.

இவர் செய்த தந்திரத்தால் படை யெடுத்து வந்த ஜெர்மன் சைனியங்களுக்குத் தலைவரான ஜெனரல் வான் க்ளக் என்பவர் பாரிஸ் வரையில் படையெடுத்து சென்றும் அந்த கரைப் பிடிக்க இயலாதுபோயிற்று. இவர் பிரிடிஷ் சைனியங்களை ஆகஸ்டுமீ 26உ வெர்மாண்ட் ஸென்ட் குவெண்டின் ரிப்மாண்ட் மார்க்கத்தில் பக்கத்தில் வந்து சூழ்ந்துகொண்டு மடக்கி முடுக்கப்பார்த்தார். அப்பொழுது அந்த ஆபத்திலிருந்து பிரிடிஷ் சைனியங்களைக் காப்பாற்றினவர் ஜெனரல் ஸர் ஹோரேஸ்ஸமித் டோரீன் அவர்கள் இவரைப்பற்றி ஸர்ஜான் ப்ரெஞ்சு அவர்கள் அவருடைய ரிபோர்ட்டில் வெகுவாய் சிலாக்கித்துப்பேசியிருக்கிறார். (*Vide* his report of 7th Septr.)

ப்ரிடிஷ் சைனியங்கள் ஆகஸ்டுமீ 17உ ப்ரான்ஸிலுள்ள 'பூலோன்' துறைமுகத்தில் இறங்கி 22உ பெல்ஜியத்திலுள்ள மான்ஸ் பட்டணம்வரையில் முன் நோக்கிச்சென்று அங்கே படை யெடுத்துவந்த ஜெர்மன் சைனியங்களை யெதிர்த்து 'மான்ஸ்' சண்டைக்குப்பின் பெல்ஜியம் எல்லையைவிட்டு ப்ரான்ஸ் எல்லைப்பக்கத்தை யடையவேண்டி யிருந்ததையும், அங்கிருந்து ஆகஸ்டுமீ 23, 25, 26, 28, 30-தேதிகளிலும் ஸெப்டெம்பர்மீ 2, 4-தேதிகளிலும் படிப்படியே பின்வாங்கி ஸீன்நதிக்குத் தென்கரையில்வந்து தங்கவேண்டியிருந்ததையும் மேலண்டைப் போர்க்களப்படத்தில் நன்றாகக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளோம். அவருடைய இரண்டாவது ரிபோர்ட்டில் பின்வாங்கிய பிரிடிஷ் சைனியம் ஸெப்டெம்பர்மீ 5உ முதல் எதிரிகளை யெதிர்த்துத்துரத்த ஆரம்பித்து மார்ன்நதிதீரச் சண்டையில் அவர்களைத் தோற்கடித்து, படிப்படியே ஏன் நதிதீரம்வரையில் அவர்களைத் துரத்திக்கொண்டுபோன சமாசாரம் கண்டிருக்கிறது. இது ஸெப்டெம்பர்மீ கடைசிவரையில் நடந்த விர்த்தாந்தங்களைக் கூறுகிறது. அக்டோபர்மீ முதல் நடந்த விர்த்தாந்தங்களை அவருடைய மூன்றாவது ரிபோர்ட்டு கூறுகிறது. இதிலே 'ஏன்' நதிதீரத்தில் ஜெர்மானியர்கள் எதிர்த்து நிற்பதையும் அங்கே பிரமாதமான சண்டை நடந்து வருவதையும் பற்றிக் சொல்லியிருக்கிறது. இங்கேயிருந்து எதிரிகள் சேனையை அவர்கள் வலப்புறத்தண்டை மடக்கி அர்ரஸ் (Arras), லா பாஸி (La Basse), லீல் (Lille) இந்த வழியாகப்போய் அவர்களைச் சுற்றிக்கொண்டு லிஸ் (Lys) நதியைத் தாண்டவிடாமல் தானே அவர்களை கென்ட் (Ghent) பட்டணம்நோக்கித் திருப்பியடித்து அங்கிருந்து ப்ரூஜஸ் (Bruges) பட்டணத்தை வசப்படுத்திக்கொள்ள ஏற்பாடு செய்திருந்தார். இந்த சமயத்தில் ஆன்ட்வெர்ப் (Antuerp) கோட்டை பிடிபட்டதனால் அங்கேயுள்ள ஜெர்மன் சைனியங்கள் விடுபட்டுப்போக அவைகள் லீல் கோட்டையைநோக்கி ஏராளமாகச்சென்று அங்குள்ள சைனியங்களை பலப்படுத்துவ



GENERAL SIR HORACE SMITH DORIEN
ஜெனரல் ஸர் ஹோரேஸ் ஸ்மித் டோரின்.

GENERAL VON KLUCK
ஜெனரல் வான் க்ளக்.

தெளிதாயிருந்தது. இதனால் 'ஏன்' நதிதீரத்தி லுள்ள ப்ரிடிஷ் சைனியங்களை யெல்லாம் (Ypres) ஈப்ரேஸ் நதிக்கரைக்குக் கொண்டு போக வேண்டியதாயிருந்தது. எதிரிகளுக் குத் தெரியாமலும் அவர்களுக்குச் சந்துவிட் டுக் கொடாமலும் 1½-லக்ஷம் பிரிடிஷ் சைனி யத்தோடு 70-ஆயிரம் இந்திய சைனியங்களை யும் ஈப்ரேஸ் நதிப்பக்கத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டிய தவசியமாயிருந்தது. இந் தக் கஷ்டமான வேலையை வெகு சாவதான மாகவும் காலஹரணமின்றியும் 17-நாளில் (அக் டோபர் 3-19.) செய்து முடித்தார்கள். (Lille) லீல் கோட்டையைச்சுற்றி நடந்த உக்கிரமான சண்டையில்தான் இந்தியதுருப்புகள் முதல் முதல் பிரவேசித்து அவர்கள் வீரதீரத்தைக் காட்டிப்பேரும்கீர்த்தியும் பெற்றார்கள். பிறகு ஈப்ரேஸ் நதிக்கரையில் நடந்த உக்கிரமான சண்டையிலும் அவர்கள் வீரதீரம்விளங்க பிரி டிஷ் சைனியங்களோடு ஒத்துநின்று எதிரி களைத் தோற்கடித்தார்கள். இப்பொழுது பிரி டிஷ் சைனியம் இந்திய துருப்புகளோடு லாபாஸி, ஆர்மேன்டைர்ஸ் டிஸ்திரிக்டுகளிலிரு ந்து ஈப்ரேஸ், ஈஸர் (Yeser) நதிதீரங்களில் பரவி டிக்ஸ்மூட் (Dixmude), நியூபோர்ட் (Nieuport) மார்க்கமாக வடகடல்வரையில் சண்டைமுகம் காட்டி நிற்கிறார்கள்.

ஏன் நதிதீரத்தில் கீழ்மேல் ஓட்டமாகவிரு ந்த பிரிடிஷ்சைனியம் இப்பொழுது அர்ரஸ் முதல் வடக்கு நோக்கிச்செல்லும் சண்டை முகத்தைப்பற்றி நிற்கிறார்கள். இங்கே லீல் கோட்டையைச்சுற்றி நடந்த உக்கிரமான சண்டையின் விவரம், ஈப்ரேஸ் சண்டையின் விவரம் முதலானவைகள் அவருடைய நாலா வது ரிபோர்ட்டில் கண்டிருக்கிறது.

அந்த ரிபோர்ட்டில் இந்திய துருப்புகளு டைய வீரதீரமும் அவர்கள்செய்த பேருதவி யும் இந்தியவீரர்கள் சிற்றரசர்கள் சண்டை முகத்தில் காட்டிய வீரதீரச் செயல்களும் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதெல் லாம் அக்டோபர்மீ நான்காவது வாரமுதல் நவம்பர்மீ மத்திவரையில் நடந்தது. இந்த ரிபோர்ட்டின் காலத்துக்குப்பிறகு நவம்பர்மீ 23உயில் ஜர்மன் சைனியம் இந்தியர்கள்மேல்

**The Western Theatre of War.**




மேலண்டைப் போர்க்களம்.

உக்கிராவேசங்கொண்டு அவர்கள் பதுங்கியிருந்து சண்டைசெய்த அகழ்களைத் தாக்கினார்கள். எதிரிகள் சைனியபலம், பீரங்கிபலம் எல்லாம் அபரிமிதமாகச் சேகரித்துக்கொண்டு இந்தியர்களை நாசம்செய்துவிடுகிறதென்று வந்தார்கள். முதலில் இந்தியர்கள் என்னதான் வீரதீரமாக எதிர்த்து நின்றாலும் ‘மெஷின்கன்’ என்கிற யந்திர வெடிகுண்டுகள் முன்நிற்க ஆற்றாமல் மிகநஷ்டப்பட்டுப் பின்வாங்கவேண்டியிருந்தது. ஆனால் அவர்களிருந்த இடம் மிகவும் முக்கியமானதாயிருந்ததால், எப்படியாகிலும் அதைத்திரும்பிப் பிடிக்கவேண்டியதென்று உத்தரவு பிறந்தது. அதன்பேரில், ஒருநாளில் மூன்றுதரம் எதிர்த்துச்சென்று முதலிரண்டு தடவைகளில் ஜெயிக்க முடியாமற்போயும் மூன்றாந்தடவை எதிரிகளைத் தோற்கடித்துத்துரத்தி ஜயக்கொடி நாட்டி நின்றார்கள். முதல்தரம் $1\frac{1}{2}$-மணிக்கு எதிர்த்தார்கள். அது பலிக்காதுபோகவே மறுபடியும் $4\frac{1}{2}$-மணிக்கு எதிர்த்தார்கள். அதுவும் பலிக்காதுபோகவே இரவு $10\frac{1}{2}$-மணிக்கு மூன்றாந்தடவை யெதிர்த்து இரவெல்லாம் சண்டைசெய்து மறுநாட்காலை $6\frac{1}{2}$-மணிக்கு எதிரிகளைத் துரத்தியடித்து ஜயக்கொடிநாட்டி நின்றார்கள். இந்தச்சண்டை மற்ற எல்லாச் சண்டைகளிலும் மிக உக்கிரமானதாயிருந்தது. ஏனெனில் ஜெர்மானியர் இந்தியர்களால் தோற்கடிக்கப்பட்டதை நினைத்து உக்கிராவேசத்தோடு அவர்களை ஹதம் செய்துவிட எண்ணிவந்தார்கள். முடிவில் இந்தியர்களால் தானே ஹதம்செய்யப் பெற்றார்கள். ஜெர்மானியர்கள் இந்தியர்களைப்போலவே வீரதீரம் காட்டி சண்டை செய்தார்களானாலும் அவர்களைப்போல் கஷ்டங்களைப்பொறுக்கும் சக்தி அவர்களுக்கில்லை. இவர்களோடு ப்ரெஞ்சு துருப்புகளும் பெல்ஜியம் துருப்புகளும்சேர்

ந்து வெகு வீரதீரத்தோடு சண்டைசெய்து வருகிறார்கள். மொத்தம் 260-மைல் தூரமுள்ள சண்டைமுகத்தில் 12-ல் ஒருபாகம் மட்டும்தான் பிரிடிஷ் சைனியங்களாலும் இந்திய துருப்புகளாலும் காக்கப்பட்டு வருகின்றது. மற்றப் பாகங்களெல்லாம் ப்ரெஞ்சு துருப்புகளால் காக்கப்பட்டு வருகின்றன. பெல்ஜியம் துருப்புகளும் சளைக்காமல் சண்டை செய்து வருகிறார்கள்.



GRAND DUKE NICHOLAS, GENERALISSIMO OF THE RUSSIAN ARMIES:

ருஷிய சைனியங்களுக்கெல்லாம் தலைவரான கிராண்ட் டியூக் நிகோலாஸ்

## THE EASTERN THEATRE OF WAR.
## கீழண்டைப் போர்க்களம்.

மேலண்டைப் போர்க்களத்தில் இருதரத்தாரும் அனேகமாய் சரிசமமாக எதிர்த்து நிற்கிறார்கள். கூட்டாளிகள் சைனியம் அவர்கள் சாமர்த்தியத்தை யெல்லாம் காட்டிச் சண்டை போட்டாலும் அதிகமாக ஒன்றும் செய்யக் கூடவில்லை. ஒருவாரத்தில் 300-கஜதூரம் எல்லையைத் தள்ளிக்கொண்டு நெருக்கியடித்தால் அதுவே விசேஷமாக நினைக்கப்படுகிறது. இப்படி எத்தனை காலத்துக்கு நிற்பார்களோ சொல்லத்திறமில்லை. ஆனால் கீழண்டைப் போர்க்களத்தில் ருஷியர்கள் ஜெர்மானியர்களை யெதிர்த்துத் தோற்கடித்தால் அப்பொழுது மேலண்டைப் போர்க்களத்திலுள்ள முடக்கு நீங்கலாம் போலும்.

கீழண்டைப் போர்க்களத்தின் படமொன்று தயாரித்து *இங்கே அதை அச்சிட்டிருக்கிறோம். அதிலே கருப்பு அடையாளமிட்ட பாகம் எல்லாம் ஜெர்மானியர் கைவசத்திலிருக்கிறது. 'விஸ்துலா' நதிக் கரையில் வார்ஸா முதல் தெற்கே டார்ஸ்மிஸல் வரையில் சண்டை நடந்துவருகிறது. முதல் தடவை ஜெர்மன் சைனியம் தோல்வியடைந்தும் மறுபடியும் திரும்பிச் சண்டைக்குப் போயிருக்கிறார்கள். 'விஸ்துலா,' 'பிலிகா' நதிகளுக் கிடையேயுள்ள பாகத்தில் அவ்விருநதிகளும் சங்கமுகம் ஆகிற இடம்வரையில் முன்நோக்கிச்சென்றிருக்கிறார்கள். இப்பொழுது இவான்கராட் (Ivangorod), லூப்லின் (Lublin), இவ்விடங்களைச் சுற்றிச் சண்டை நடந்துவருகிறது. வார்ஸாவைச் சுற்றியும் சண்டை நடந்துவருகிறது. ஜெர்மானியர் விஸ்துலா நதியைத் தாண்டிச் செல்ல ருஷியர்களால் தோற்கடிக்கப்பெற்றுத் துரத்தப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் முற்றிலும் தோற்கடிக்கப்பெற்றால் கூண்டிலகப்பட்டது போல் பிலிகா நதிக்கும் விஸ்துலா நதிக்கும் இடையிலே அகப்பட்டுக்கொண்டு நசுக்கிவிடப் பெறுவார்கள். கீழண்டைப் போர்க்களத்தில் ருஷியர்கை பலத்திருக்கிறதாகத் தெரியவருகிறது. ஜெர்மானியர் இங்கே கை சளைத்தால் மேலண்டைப் போர்க்களத்திலிருந்து சைனியங்களைக் கொண்டுவரவேண்டி நேரிடும். அப்பொழுது கூட்டாளிகள் சைனியம் ஜெர்மானியரை யெதிர்த்து பெல்ஜியத்தை விட்டுத் துரத்தப்பார்க்கலாம். அதுவரையில் இருசைனியங்களும் மறியல் போட்டுக்கொண்டு நிற்க வேண்டியதுதான்போல் தோன்றுகிறது.

---

## THE DAILY COST OF THE GREAT WAR.
## இப்பாரத யுத்தத்தின் தினப்படிச் செலவு.

இப்பொழுது நடந்துவரும் பாரதயுத்தம் மஹா பாரதயுத்தத்திலும் பெரிதானதென்று சொல்லலாம். இது பூமிபாரம் தீர்க்கவந்ததுபோல் கலியுகத்துக்கே ஒரு விசேஷமான யுத்தமாயிருக்கிறது. ஏனெனில் இந்த யுத்தத்தில், நிலத்தின் கீழ் சுரங்கம் வெட்டி

* முன்பக்கம் பார்க்க.




*The Eastern Theatre of War.

The darkened portion is in German possession.

கீழண்டைப் போர்க்களம். கறுப்புப்புள்ளியிட்டபாகம் ஜெர்மனிவசப்பட்டிருக்கிறது.

அங்கிருந்து சண்டைசெய்கிறார்கள். தண்ணீரின் கீழ்மூழ்கியோடும் படகுகளைக்கொண்டு பெரிய சண்டைக் கப்பல்களையெல்லாம் தகர்த்து விடுகிறார்கள். அமெரிக்காவில் பேர்போன மிஸ்டர்எடிஸன் என்பவர் தண்ணீரில் மூழ்கிச் சண்டை செய்யும் படகுகள் ஒரு மாசம் தண்ணீருக்குள் தானேயிருக்கவும் அது வரையில் படகிலுள்ளவர்கள் மூச்சு விடுவதற்கான நல்ல காற்றை மீன்களைப்போல் கடலிலிருந்தே யுண்டு பண்ணக்கூடிய யந்திரம் ஒன்று புதிதாய் நிர்மித்திருக்கிறாராம். இது இன்னும் சண்டையில் உபயோகத்துக்கு வரவில்லை. ஆகாயரதத்திலேறி அந்தரிக்ஷத்தில் சண்டை செய்கிறார்கள். கடலில் சுரங்கமிட்டு கப்பல்கள் தாராளமாகப் போவது அபாயகரமாகச் செய்து வருகிறார்கள். இந்த யுத்தத்தில் நேரும் ஜீவ நஷ்டத்தைச் சொல்லி முடியாது. பணச்செலவைக்கணக்கிட்டதில் ஒரு நாளைக்கு சண்டைக்காரர்கள் செலவெல்லாம் 90-லக்ஷம் பவுன் ஆகிறதாம். பிரிடிஷார் தினச்செலவு மட்டும் 10-லக்ஷம் பவுன். இப்படியே ஒவ்வொருவர் தினச்செலவையும் கணக்கிட்டு 90-லக்ஷம் செலவாகிறதென்று கண்டு பிடித்திருக்கிறார்கள். டிஸெம்பர் முடிவு வரையில் சண்டையிலும் சண்டை முஸ்தீபுகளிலும் 300-கோடி பவுன் செலவாயிருக்கிறதாகத் தெரியவருகிறது.

## THE WAR CHESTS OF THE COMBATANTS.
## சண்டைக்காரர்கள் கைரொக்கம்.

இந்தச் சண்டை யெத்தனை காலம் நடக்குமென்று பலரும் கேட்கிறார்கள். மூன்று மாசம் முதல் மூன்று வருஷம் வரையில் நடக்கலாமென்று பலர் பலவிதமாக அபிப்பிராயப்படுகிறார்கள். சண்டை ஆரம்பமாகி இப்பொழுது நான்கு மாசகாலமாகியும் தோற்பு கெலிப்பு ஒன்றும் நிச்சயமாகத் தெரியவில்லை. ஆகையினால் சண்டைக்காரர்கள் சண்டை துவக்கின காலத்தில் கைரொக்கமாக வைத்திருந்த பணம் எவ்வளவென்று தெரிந்தால் அதிலிருந்து சுமாராக அவர்கள் கை சளைக்காமல் சண்டை செய்யகூடிய காலம் தெரியலாம். அதற்கு மேல் சந்தர்ப்பம் எப்படியோ அப்படி பார்த்துக்கொள்வார்கள். சண்டை போடுவதற்காக கைரொக்கமாக வைத்திருந்த பணத்தை மட்

டும் சொல்கிறோம். இதற்குமேல் அவர்களுக்கு பணம் கிடைக்காது என்று சொல்வதற்கில்லை யாயினும் கைரொக்கம் இவ்வளவென்று தெரிந்தால் அதைக்கொண்டு அவர்கள் எத்தனை காலத்துக்குச் சண்டையிலிழுத்துக்கொண்டு நிற்க முடியுமென்று ஒரு உத்தேசம் கண்டு பிடிக்கலாம். இதில் கடன் வாங்கக்கூடிய தொகைகளும் சமயம் நெருக்கடியாகவிருந்தால் ஜனங்கள் மிகுத்துவைத்த ஸேவிங்ஸ் பாங்கி டெபொஸிட்டுகளையும்கூட எடுத்து உபயோகிக்கலாம். ஆனால் அதையெல்லாம் இங்கு சேர்க்கவில்லை. சண்டைத் தேதியில்,

ஜெர்மனியின் கையிருப்பு ரொக்கம்:

1870-ம் வருஷத்துச் சண்டைக்குப் பிறகு சண்டைகாகவென்று முதல் சேர்த்து வைத்திருந்த பணம் 60-லக்ஷம் பவுன்.

சென்ற வருஷம் அவசரச் செலவுக்கென்று வெள்ளி நாணயமச்சிட்டதில் 60-லக்ஷம்.

டிரெஷரி நோட்டுகளுக்கு பதிலாக பொன் நாணயம் வாங்கிச்சேகரித்ததொகை 60லக்ஷம்.

ஆக மொத்தம் 180-லக்ஷம் பவுன்.

இதைத்தவிர பாங்கிகள் நோட்டு மூலமாகச் சேரக்கூடிய பணம் 7-கோடி பவுன். வெள்ளியில் ஷை வகையில் 1-கோடியே 70-லக்ஷம் பவுன்.

கையிருப்பு நாணயங்களையும் சேர்த்தால் $10\frac{1}{2}$-க்கோடி பவுன் அகப்படும்.

கைரொக்கம் பாங்கியில் கிடைக்கக்கூடியது எல்லாவற்றையும் சேர்த்தால் மொத்தம் 12 கோடியே சொச்சம் பவுன் ஆகிறது.

ஜெர்மனியின் சண்டைச் செலவு மாசம் ஒன்றுக்கு—4-கோடி பவுன். அதாவது தினம் ஒன்றுக்கு 13 லக்ஷத்து 33 ஆயிரத்து 333 பவுன் ஆகிறது. பிரிடிஷ் தபால் செலவு தினம் ஒன்றுக்கு சுமார் 10 லக்ஷம் பவுன் ஆகிறதென்று முதல் மந்திரி தெரிவித்தார். ஆகவே கையிருப்புத் தொகையெல்லாம் 3-மாசத்துக்குத்தான் போதுமானதாயிருக்கும். ஆனால் பெல்ஜியத்தில் ஏராளமான தொகை கொள்ளையிலும் யுத்த நஷ்டத்துக்கென்று வசூல் செய்த காலத்திலுமாகக் கிடைத்திருக்கிறது. அதைக்கணக்கில் சேர்க்கவில்லை.

சண்டை யாரம்பத்தில்
பிரான்ஸின் கையிருப்பு ரொக்கம்

இதைவிட இன்னும் அதிகமாயிருக்குமென்று சொல்லப்படுகிறது. கடன்வாங்க அனுகூலங்கள் அதிகம் என்று சொல்லப்படுகிறது.

பொன்நாணயக் கையிருப்புத் தொகை ரொக்கம் 16 கோடி
வெள்ளி நாணயம் 3 கோடி
ஆக மொத்தம் 19-கோடி பவுன்.

சண்டை யாரம்பத்தில்
பெல்ஜியத்தின் கையிருப்பு ரொக்கம்

நாணயமாகவும்தங்கப்பாளங்களாகவும் உள்ளவைசேர்ந்து 1-கோடியே 30-லக்ஷம் பவுன்.

பிரிடிஷார் இப்பொழுது கடன் கொடுத்திருக்கும் தொகை 1-கோடி.

ஆக மொத்தம் 2 கோடியே 30 லக்ஷம் பவுன்.

சண்டை யாரம்பத்தில்
ஆஸ்திரியா-ஹங்கேரியின் கையிருப்பு ரொக்கம்

பொன் நாணயமாக 5-கோடியே 20-லக்ஷம் பவுன்.

வெள்ளி நாணயம்-கோடியே 20-லக்ஷம்.

ஆக மொத்தம் 6 கோடியே 40 லக்ஷம் பவுன்.

இது 9-மாசத்துக்கு சண்டைசெய்யப் போதுமானதாயிருக்குமென்று கணக்கிட்டுப் பார்த்துக் குறிக்கப்பட்டிருக்கிறது.

சண்டை யாரம்ப காலத்தில்
ருஷியாவின் கையிருப்பு ரொக்கம்.

ருஷிய அரசிறை மந்திரி தெரிவித்தபடி பாங்கியில் தங்கநாணய ரொக்கம் 17-கோடி பவுன்.

சண்டைதொடுக்கக் கையிருப்பில் 5-கோடி பவுன்.

வரிவகையிலிருந்துபயோகிக்கக்கூடிய தொகை $2\frac{1}{2}$ கோடி பவுன்.

ஆக மொத்தம் $24\frac{1}{2}$-கோடி பவுன்.

பிரிடிஷ் கவர்ன்மேண்டார் கையிருப்பு.

நாணயரொக்கம் 3-கோடியே 30-லக்ஷம் பவுன்.
8-ஙீ சண்டைச்செலவுக்காக=30-கோடிபவுன்.

இதைத்தவிர பாங்கியிலும் வெளிநாடுகளிலும் ஏராளமான தொகையிருக்கிறது. பணத்துக்கு குறைவில்லை. இவையெல்லாம் லண்டன் சேர ஏற்பாடும் செய்யப்பட்டிருக்கிறது. வர்த்தகவியாபார நாணய வியவகாரம் நடந்துகொண்டிருக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

## THE GROWTH OF WEALTH AMONG NATIONS DURING THE LAST 100 YEARS.

### சென்ற நூறு வருஷங்களில் தேசங்களின் ஐசுவரியவிருத்தி விவரம்.

| தேசம். | 1814. | 1914. |
|---|---|---|
| | கோடிபொன் | கோடிபொன் |
| யூனைடெட் கிங்டம் ... | 250 | 1700. |
| ஷெ ஜனங்கள் வருமான மொத்தம் ... | 30 | 240. |
| (ஜனவிருத்தி 100-க்கு 130 அதிகம்) | | |
| ப்ரான்ஸ் தேசம் | 200 | 1000 |
| (ஜனவிருத்தி 100-க்கு 33 அதிகம்) | | |

நூறு வருஷங்களுக்கு முன் ஜெர்மனி இல்லவேயில்லை. சில்லரை ராஜ்யங்கள் பல ஏழைமையில் மூழ்கியிருந்தன. அவைகளின் செல்வமெல்லாம் சேர்ந்து ப்ரான்ஸுக்கு ஈடாகச் சொல்லும்படியாகவில்லை. மிகவும் குறைந்திருந்தது.

தற்காலம் ஜெர்மனியின் மொத்த ஐசுவரியம் 1,600 கோடி பவுன். ஜனங்களின் வருஷ வருமானம் ... 200 கோடி.

ஜெர்மனியின் ஜனத்தொகை சென்ற நூறு வருஷகாலத்தில் 2-கோடியே 40-லக்ஷத்திலிருந்து 6 கோடியே 70-லக்ஷமாயிருக்கிறது. அதாவது 100-க்கு 180 விகிதம் அதிகமாய் விருத்தியாயிருக்கிறது.

Annual Savings-வருஷாந்தரலாப மிகுதி.

க்ரேட்ப்ரிடன் வருஷம் 40-கோடி லாபம் மிகுத்துவைக்கிறது.

| | | |
|---|---|---|
| ப்ரான்ஸ் | 20-கோடி | ,, ,, |
| ஜர்மனி | 30-கோடி | ,, ,, |

## ADVICE TO STUDENTS.

### ஹிதோபதேசம்.

(மிஸ்டர் பூபேந்திரநாத் வாஸுவின் புத்திமதி.)

N. I. A, AT "NO 21 CROMWELL ROAD"

லண்டன் பட்டணத்திலே 'க்ராம்வெல் ரோட்' 21-வது நெ. கட்டடத்தில் "நாஷனல் இந்தியன் அஸ்ஸோஷியேஷன்" சங்கத்தின் பிரதமஸ்தானமிருக்கிறது. இந்தசங்கம் மிஸ் மேரி கார்பென்டர் என்னும் பரோபகாரியவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. இதன் முக்கிய நோக்கம் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் உள்ள சம்பந்தத்தை பலப்படுத்தி இருதேசத்தாருக்குமுள்ள நேசத்தை விர்த்திசெய்ய வேண்டும். நேசமில்லாத விடத்து நேசத்தையுண்டுபண்ண வேண்டும் என்பதே. மிஸ் மேரி கார்பென்டருக்குப்பின் மிஸ் இ. ஏ. மானிங் துரைசானி இச்சங்கத்துக்கு கௌரவ காரியதரிசியாக விருந்து இதன் நடபடிக்கைகளை மேம்பட நடத்திவந்தார். அவருடைய நேசமும் ஸ்வயநயம் பாராட்டாத பரோபகார சிந்தையும் இச்சங்கத்துக்கு ஓர் பெரிய ஆஸ்தியாக விருந்ததுமன்றி இந்தியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் கூட்டுறவுண்டாகச் செய்வதில் பெரும் சாதகம் விளைப்பதாக விருந்தது. அவருடைய அனுதாப சிந்தையாலும் அனுகூல முயற்சியாலுமே நாம் இங்கே வித்யா விஷயமாகவும் கிராமசுகாதார விஷயமாகவும் சிரத்தை யெடுத்துக்கொண்டுழைத்தது சீமையில் நம் விக்டோரியா மஹாராணியின்ஜேஷ்டபுத்திரராயிருந்த மஹாமேன்மை தங்கிய எட்வர்ட் இளவரசருக்குத் தெரியவரலாயிற்று. அவர் இப்பத்திராசிரியர் முயற்சியை மதித்து அவருடைய ஹிருதய பூர்வமான வந்தனத்தைத் தெரிவிக்கும்படி யெழுதுவித்த கடிதம் அவரால் இன்னமும் விசேஷமாக நன்கு மதிக்கப்பட்டு வருகிறது. நல்லவர்களுடைய அங்கிகாரமும் அனுதாபமும் நற்சிந்தையும் இலகுவில் சித்திப்பதில்லை. ஏனெனில் நல்லவர்க்கு நல்லவனாக விருப்பதும் நல்லாரால் நன்குமதி

க்கப்பெறுவதும் சுளுவாகமாட்டாது எனெனில் பாசாங்கு பொய்வேஷமும் மேலாட்டபாட்டமும் அவர்களிடம் செல்லாவாகையால் என்க.

மாணவர்க்கு உதவி செய்வதற்கான கமிட்டி.

இப்பொழுது இந்த சங்கம் இந்தியமாணவர்களுக்கு அனுகூலமாக ஏற்பட்ட கவர்ன்மெண்டு கமிட்டியின் ஆதரவில் நடைபெற்று வருகிறது. இங்கே இந்தியாவிலிருந்து சென்ற மாணவர்களெல்லாம் கூடியிருந்த சபை முன் கல்கத்தாவிலிருந்து சீமைக்குச் சென்ற கனம் மிஸ்டர் பூபேந்திரநாத் வாஸு அவர்கள் இந்தியாவுக்குத் திரும்புமுன் அவரை ஊருக்கனுப்ப வென்று கூடிய சபையில் அங்குகூடிய இந்தியமாணவர்களுக்குப் பெற்ரோர் மொழியாகச் சில அரிய உபதேச வார்த்தைகளைச் செப்பியர். அவை சுருங்கச்சொல்லில் பின்வருமாறு:—

"ஹிதோபதேசம்:"இந்தியாவின் தூதர்கள்."

இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குப் போகும் வாலிபர்களெல்லாம் இந்தியாவின் தூதர்களாகத் தங்களை மதித்து அதற்குத் தக்கபடி நடந்துகொள்ளவேண்டும். எனெனில் அவர்கள் நடத்தைப் பிசகெல்லாம் இந்தியாவிலுள்ள ஜனங்களுக்குப் பிரதிகூலமாக முடியும்.

தேஹமனேசுத்தி.

மாணவர்கள் எல்லாரும் எப்போதும் தேஹசுத்தம் மனேசுத்தம் உள்ளவர்களாகவிருக்கவேண்டும். இதற்குத்தான் பிரஹ்மசாரிய விருதம் என்று சொல்லுகிறது. இந்த சுத்தம் அந்நிய தேசத்தில் மதுகுடிமலிந்து ஸ்திரீ சங்கமும் விசேஷமாய் லபிக்கக் கூடிய ஒரு பெரிய தலைநகரிலிருக்கும் வாலிபர்களால் பெறப்படுவது கஷ்டமென்று சொல்லக் கேட்டிருக்கிருர். ஆனல் அது அவ்வளவு கஷ்டமில்லை. ஏகாக்ரசித்தமும் நல்ல சித்தவிருத்தியும் உயர் லக்ஷியமும் உள்ளவர்களுக்கு தேஹமனேசுத்தம் லபிப்பது ஒருக்காலும் கஷ்டமாகாது. குழந்தைகளைத் தாலாட்டிப் பாடும் காலம் முதல் "பானைசுசி, சட்டிசுசி, பாங்கான தேஹம் சுசி" யென்று "சுசி" (சுத்தம்) எல்லாவற்றிலும் மேலானதாகவும் ஹிருதயசுத்தியின்றி பகவானுடைய கிருபை கிடைக்காதென்றும் நம்பியுள்ள நம்மவர்கள் ஒழுக்க வழக்கங்களில் பழகிய சிறுவர்களுக்கு சுத்தம் தவறுவது கஷ்டமேயின்றி சுத்தமாயிருப்பது கஷ்டமாக விருக்கக்கூடாதென்று வற்புறுத்திக் கூறினர்.

இன்னெரு முக்கியமான விஷயத்தைப்பற்றியும் அவர் மாணவர்களுக்கு ஹிதோபதேசம் செய்தார். அது மாணவர்கள் துரைத்தன விஷயங்களிலும் இராஜரீக காரியங்களிலும் தம் அபிப்பிராயத்தை வெளியிடுவதாகக்கூட்டங்கூடிப்பேசும் வழக்கத்தைப் பொறுத்ததாயிருந்தது.

துரைத்தனகாரியம் "கிள்ளுக்கீரையில்லை."

துரைத்தன காரியங்களும் இராஜரீக விஷயங்களும் "கிள்ளுக்கீரை" யில்லை. அதாவது அற்பமான விஷயங்கள் அல்ல. அவற்றையுணர்வதற்கும், உணர்ந்தபின் பரியாலோசனைசெய்து தேசப்பொது க்ஷேமத்துக்கு அனுகூலமானவை பிரதிகூலமானவையிது என்று விவேகஞானத்துடன் பகுத்தறிந்து பிறர் மனதிற்பதிய அவற்றை யெடுத்துரைக்கவும் எவ்வளவோ உலகானுபவமும் முதிர்ந்த உலகஞானமும் வேண்டும். இவ்விரண்டும் மாணவர்களுக்கு அவர்களுடைய வயதில் கிடைப்பதரிது. ஆகையால் அவர்கள் தங்கள் புத்திவிர்த்திக்கு அவசியமான விஷயங்களில் மனதைச்செலுத்த வேண்டுமேயன்றி அவர் புத்திக்கெட்டாத விஷயங்களில் புகுந்து படாடோபம் செய்வது சரியல்லவென்று சொன்னர். இது மிகவும் சரியான வார்த்தையே.

யுத்தகாரணம்.

பிறகு இப்பொழுது நடக்கும் யுத்தத்தைக் குறிப்பிட்டு, உலகத்தில் மமதை காரணமாக ஸ்வயநயமும், அதுமூலமாக உண்டாகும் அஹம்பாவச்செருக்கும் அதிகரித்தால் அது முதிர்ந்தபோது அதை யொழிப்பதற்கான வழி

வகைகள் தானே யேற்படுமென்று நமது பூர்வ கிரந்தங்களும் இருஷிகளும் பெரியோர்களும் சொல்லியிருக்கிறார்கள். தேவர்கள்கூட கர்வமடைந்தபோது அவர்கள் கர்வத்தையடக்க பகவான் திரிபுரஸம்ஹாரம் செய்யவில்லையா! மஹாவலி சக்ரவர்த்தியின் கர்வத்தை யடக்க பகவான் வாமனவதாரம் எடுக்கவில்லையா! அனாதிபாயுள்ள இந்த ஸநாதநஸம்பிரதாயம் இப்பொழுது மெய்யாகப் பலித்ததன்றி இதில் வேறொன்று மில்லையென்றும், இச்சண்டை திடீரென்று நிர்நிமித்தியமாக உண்டானதல்லவென்றும் சொன்னார்.

தர்மஸ்தாபன முறை.

அதர்மம் தலையெடுத்து தர்மத்துக்கு நஷ்டம் வந்தால் அதர்மத்தை யடக்குவதற்கான மார்க்கம் ஈசுவர கிருபையால் தானே யேற்படுமென்பது பூர்வகாலந்தொட்டு நமது முன்னோர்கள் போதித்து வந்த உண்மையே யன்றி வேறல்ல. இந்தியர்கள் இதை யுணர்ந்தேயிருக்கிறார்கள். அன்றியும் இராஜ்பத்துக்குக் கேடுவந்தபோது இராஜ்யபாதுகாப்பின் பொருட்டும் ஜனக்ஷேமத்தின் பொருட்டும் துணிந்து சண்டைபோட வேண்டியது முக்கியமான க்ஷத்திரியதர்மம். இந்த க்ஷத்திரிய தர்மம் இந்தியாவில் அற்றுப்போகவில்லை. இந்த பாரதமஹாயுத்தம் நேர்ந்ததினால் ஹிந்துக்களும் மகம்மதியர்களும் சிந்தை குலையக்காரணமில்லை. ஏனெனில் பூர்வந்தொட்டுள்ள "தர்மமே ஜயம்" என்னும் உண்மையை ஸ்தாபிக்க இந்தச் சண்டை நேர்ந்திருக்கிறதே யன்றி வேறொன்று மில்லை. 2000-வருஷங்களுக்கு முன் ஏசுகிறிஸ்து எதற்காகத் தன்னுயிரைக் கொடுத்தாரோ, அதேகாரணம் தான் இப்பொழுது இச்சண்டையை உண்டுபண்ணியிருக்கிறது. குருக்ஷேத்திரத்தில் நடந்த யுத்தம் முதல், இப்படிப்பட்ட சண்டை யுண்டாவது சகஜம் என்று நம்மவர்களுக்குத் தெரியும்: ஆகையால் புண்ய பூமியாகிய நம் தாய்தேசத்தின் தர்மம் நிலைக்க நம்மவர்கள யுத்தம் செய்யப் பின்வாங்கார்கள்."

---

## THE COMMERCE-RAIDER EMDEN AND ITS EXPLOITS, WITH ILLUSTRATIONS.

## எம்டன் கப்பலும் அது செய்த ஹாட்டியும்—(படங்களுடன் கூடியது.)




Map showing the field of operations of the Emden. The Cocos Is. Is also shown.

எம்டன் கப்பல் செய்த ஹாட்டிகளைக் காட்டும் படம். அது நாசமான இடமாக்கிய கோகோஸ் தீவும் காட்டப் பட்டிருக்கிறது.

* (கீலிங்) கோகோஸ் தீவு.

எம்டன் என்னும் ஜெர்மனி கப்பல் 3,600 டன் உடையது. அது முதலில் கியோ-சௌ (Kiao-Chau) என்னு சீனதேசத்திலுள்ள * ஜெர்மனி ஸ்தானத்தில் இருந்தது. (படம் பார்க்க,) ஜப்பான் கியோ-சௌவைப் பிடித்துக் கொள்ளவென்று ஜெர்மனியோடு சண்டை

துவக்கியதும் இந்த எம்டன் கப்பல் அவ்விடத்தைவிட்டு மெல்ல நழுவிவிட்டது. சீனுவுக்கும் ஜப்பானுக்கும் இடையிலுள்ள 'மஞ்சட் கடல்' என்று பொருள்படும் 'யெல்லோ-ஸீ'யை விட்டுத் தென்புறமாய் நழுவிச்சென்று போர்மோஸா (Formosa) தீவு வழியாக தென் சீனுக்கடலைத் தாண்டி சிங்கப்பூருக்கு வந்து, அங்கேயிருந்து திருட்டுத்தனமாகவே பெங்காளக் குடாக்கடலில் நுழைந்து அங்கே ஸெப்டெம்பர்மீ 10-முதல் 15-உக்குள் 6-பிரிடிஷ் வியாபாரக் கப்பல்களை மூழ்கடித்துவிட்டு, ஸெப்டெம்பர்மீ 22உ சென்னைத் துறைமுகந்தாண்டிச் சென்று சென்னையின்மேல் குண்டு வெடிகள் தீர்த்து துவம்ஸம் செய்து, புதுச்சேரி மார்க்கமாய் இலங்கைத் தீவைச் சுற்றிக்கொண்டு மங்களூருக்கு எதிரில் லக்ஷத்தீவுகளுக் கருகில் ஸெப்டம்பர்மீ 23-29 தேதிக்குள் 4-கப்பல்களை மூழ்கடித்து ஒன்றைத் துணைக்கு வைத்துக்கொண்டது. (படம் பார்க்க.) பிறகு மினிகாய் தீவுகளண்டை அக்டோபர்மீ 15-19உகளுக்குள் 5-கப்பல்களை மூழ்கடித்து ஒன்றை வைத்துக்கொண்டது. அக்டோபர்மீ 16உ எம்டன் கப்பலின் துணைக்கப்பல்களில் இரண்டு யார்மத் கப்பலால் பிடிக்கப்பட்டது. இப்படியாக சண்டை யாரம்பமான மூன்று மாச காலத்தில் இந்த எம்டன் கப்பல் 21-பிரிடிஷ் வியாபாரக் கப்பல்களைப் பிடித்து அவற்றில் 17-கப்பல்களை மூழ்கடித்திருக்கிறது. மற்றக் கப்பல்களில் அது தனக்குத் துணையாக வைத்துக்கொண்ட இரண்டு கப்பல்களைத் தவிர மற்றவைகளை விட்டுவிட்டது. ஏனெனில் மூழ்கடித்த கப்பல்களின் ஆள்களை கைதியாகப் பிடித்து வைத்துக்கொள்ள முடியாமையால் அவர்கள் தப்பும்படி அந்தக் கப்பல்களில் வைத்து அவர்களை யனுப்பிவிட்டது. இக்கப்பல் போனவழியைக் காட்டியுள்ள படமொன்று இங்கே சித்தரித்துக் காட்டப்பட்டிருக்கிறது. அதிலே இது செய்த லூட்டிகளெல்லாம் காட்டப்பட்டிருக்கிறது. கடைசியில் 'கோகோஸ்' தீவண்டை (படத்தின் தென்கோடி வரியண்டை பார்க்க) ஸிட்னி யென்னு ஆஸ்திரேலியன் கப்பலால் பிடித்துத் தகர்த்து தீப்பற்றி நாசமாய்விட்டது.



The Commerce-Raider Emden 3,600 Tons, destroyed November 9th.

நவம்பர்மீ 9உ கோகோஸ் தீவண்டை நாசம் செய்யப்பட்ட எம்டன் கப்பல் (மூழ்கும் தருவாய்).

இந்தக் கப்பலின் தலைவர் காப்டன் வான் முல்லர் என்பவர். இவருடைய தாயாரும் மனைவியும் இங்கிலீஷ் ஜாதியைச் சேர்ந்தவர்கள். இவருடைய தகப்பனார் மட்டும் ஜர்மன் ஜாதியர். இவர் மஹாவீரதீர சாமர்த்திய முடையவர். வீணாக உயிர்வதை செய்யத் துணியாத காருண்யர். யுத்த ஒழுங்குப்படி நடந்துகொண்டவர். ஆகையால் இவர் கப்பல் பிடிபட்டபொழுது இவருக்கு யாதொரு தீங்கும் விளையாதிருக்கவேண்டுமென்று இங்கிலாந்தில் எல்லாரும் வேண்டிக்கொண்டார்கள். இவர் நாசம் செய்த கப்பல்கள் சரக்குகளின் விலை மதிப்பு 20-லக்ஷம் பவுனிருக்கும். ஆனால் வீணாக ஒரு உயிருக்காவது தீங்குசெய்தவரில்லை. இவருடைய கப்பல் நவம்பர்மீ 9உ கோகோஸ் தீவண்டை நாசம் செய்யப்பட்டது.



CAPTAIN VON MULLER OF THE EMDEN.

எம்டன் தலைவர் காப்டன் வான் முல்லர்.

அக்கப்பல் மூழுகவிருக்கும் சமயத்தில் எடுத்த அதன் படமொன்றைக் மேலே காட்டியிருக்கிறோம். அதோடு காப்டன் வான் முல்லருடைய படத்தையும் பிரசுரிக்கிறோம். இவரோடு பிடிபட்டவர்களில் ஜெர்மன் கெய்ஸருடைய மருமகனாகிய லெப்டினெண்ட் ப்ரின்ஸ் ஜோஸெப் என்பவர் ஒருவர். இவர் ஹாஹன்ஸாலர்ன் வம்சத்தைச் சேர்ந்தவர். இவரையும் காப்டன் முல்லரையும் அங்கிலேய கப்பற்படை யதிகாரிகள் வெகு கௌரவமாக நடத்த வேண்டுமென்று உத்தரவு செய்தார்கள். இவர்கள் யுத்த கைதிகளானாலும் யுத்த ஒழுங்குப்படி கௌரவமாய் நடந்துகொண்டவர்களாதலால் அவர்களுடைய கத்திகளைத் தரித்திருக்கும்படியான கௌரவம் அளிக்கப்பட்டது. இவர் கொட்டம் அடங்கினதில் எல்லாருக்கும் சந்தோஷம்தானானாலும் இவரிடத்தில் யாருக்கும் பகையில்லை. ஏனெனில் ஒழுங்குப்படி நடந்துகொண்ட உத்தமர் ஆதலால் என்க.

## MR. CHURCH'S REPLY TO GERMAN "APPEAL TO THE CIVLIZED WORLD."

### "AMERICAN VERDICT ON THE WAR."

## இப்பார’தயுத்தம் விளைந்ததற்காக உலகாபவாதம் யாரைச் சேரும்?

சென்ற சஞ்சிகையில் யுத்த காரணத்தைப்பற்றி விவரமாய் எழுதியிருந்தோம். ஜெர்மனியார் இந்தப்பார’த யுத்தம் நேர்ந்ததற்குக் காரணம் இங்கிலாந்து தானென்று பிரிடிஷ் கவர்ன்மெண்டார் தலையில் பழிசுமத்தப் பார்க்கிறார்கள். கெய்ஸரும் அவருடைய சான்ஸெலரும் இவ்விதம் சொல்வதன்றி ஜெர்மனியிலுள்ள வித்யாரத்னங்களான பிரபல வித்வான்கள் 93-பேர்கள் சேர்ந்து அமெரிகாவிலுள்ள எல்லாருக்கும் ஒரு விண்ணப்பம் அனுப்பியிருக்கிறார்கள். அதன் உண்மையை மறுத்து பிட்ஸ்பர்கிலுள்ள கார்னகி இன்ஸ்டிட்யூட் தலைவரான மிஸ்டர் சர்ச் அவர்கள் பெர்லினிலுள்ள டாக்டர் ப்ரிட்ஸ் ஷேபர் அவர்களுக்கு வெகு தீரமான பதில் எழுதியிருக்கிறார். அவருடைய கடிதம் லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் நவம்பர் ௴ 30உ வெளியாயிற்று அதன் அச்சிட்ட பிரதியொன்று விவேகசிந்தாமணியில் பிரசுரம் செய்யவென்று நமக்கு அனுப்பியிருக்கிறார்கள். அதை அப்படியே இங்கிலீஷில் பிரசுரம் செய்கிறோம். யுத்த காரணம் உள்ளபடி யின்னதென்று தீரத் தெளிய பார்லிமெண்டரி பேபரிலிருந்து எடுத்துச் சொல்லி இந்தச் சண்டையில் பிரிடிஷார் புகநேர்ந்த தெப்படி யென்பதை இந்த யுத்தகாண்டத்தில் ஏற்கனவே விளக்கின பின் அவருடைய பதிலை மறுபடியும் தமிழ்ப்படுத்த நிமித்தமில்லை. அந்தந்த கவர்ன்மெண்டார் பிரசுரித்துள்ள அபிஷியல் தஸ்தாவேஜுகளிலிருந்து உண்மையை எடுத்தோதி பெல்ஜியத்தின் மீது படையெடுத்துச் சென்றது பிசகென்று ஜெர்மன் சான்ஸலரே ஒட்புக்கொண்டிருக்கிறதையே வற்புறுத்திக் கூறி ஆஸ்திரியா ஸெர்பியாவை வீணாக சண்டைக்கிழுத்ததையும், அதற்கு ஜெர்மனி உடந்தையாயிருந்ததன்றி வேறு யாராவது ஸெர்பியாவுக்குப் பரிந்து கொண்டு வந்தால் சண்டை தொடுப்பேமென்று ஜெர்மனி யுத்த ஸந்நத்தமாய் நின்றதையும் சொல்லி, ஜெர்மனி ஆபத்திலிருந்ததாகச் சொல்வதை மறுத்து இந்தப் பாழும் யுத்தத்துக்குக் காரணம் உண்மையில் ஜெர்மனியிலுள்ள சண்டைக்காரர்களே யன்றி வேறில்லை யென்றும் அவர்களுக்கெல்லாம் தலைவர் 2-வது வில்லியம் சக்ரவர்த்தியே யென்றும் அவர் தம்முடைய குழந்தைகளையெல்லாம் சண்டைக்குத் தயாராகவே பழக்கி வந்தாரென்றும், அவருடைய ஏகபுத்திரியையும் அமெரிகாவிலுள்ள நாங்கள் கர்னல் உடைதரித்துள்ள அவள் படத்தினாலேயே அறிவோமன்றி மற்றப்படி அறிய மாட்டோமென்று வற்புறுத்திக் கூறுகிறார். உலகத்தார இந்தப் பார’த யுத்தம் விளைத்ததற்காக ஜெர்மனியை நோவார்களே யன்றி வேறு ஒருவர்பேரிலும் பழிபோடார் என்று ஸ்பஷ்டமாய் விளங்க எழுதியிருக்கிறார்.

## "THE SHOCKING STORY OF PROUD WILLIAM."

(*From Punch's Annual for* 1915)

## உவில்-லி-யம் என்னும் அஹம்பாவ புருஷன கதை.

(குழந்தைகளுக்கான விதூஷகன் கதை.)

1. குழந்தைகளேயொரு கதைசொல்லு’ றேன்கேட்க வாருங்கோள்!
பழங்கதையொன் றுளத்அஹம்பாவத் தாலேயழிந்தான் கதையது!
பழங்கதைபோ லிந்தப்புதுக்கதை யஹம்பாவப் புருஷன்கதை:
முழங்கவேவிகட வித்தையிற்றேறிய விதூஷகன் பார’தப் போர்க்கதைகேள்:—

2. "உவில்-லி-யம் என்றொரு மானவன் இருந்தான்:
நிலத்திலும் நீரிலும் போர்செய்வல் வீரனவன்!
‘கீல்’-என்னும் கால்வாயில் ஓடுகப்பலெழிற் படையுடையான்,
‘வேல்’-ஒடு நால்வகைச் சேனையுமாகாச ரதமுமுண்டு.

3. எதையுமற் றெவரிலுநன்றாகச் செய்வன்மையுண்டெனும் பேருமுண்டு
கவசம்பூண் கைக்குத்தால் எதையும்தகர்ப்ப னென்’கர்வமுண்டு
பறவையிற்கொடிய பருந்தொன்றும் பழக்கித்தன் கொடியிலுள்ளான்!
நறுக்குமீசையன் கிறுக்குச்சடாரவன் முறுக்குமீசையைப் பார்த்தால் பயம்!

4. அன்னவ னுக்கிரு நேயரு ளாரம்மா!—
அவர்களி லொருவர்தன் நேயம் போலி!—
ஆயினும் அற்புத உவில்-லி-யம் எப்போதும்
நயனங்கள் மூடாதே சொப்பனம் காண்தகையான்.

5. அன்னவ னொருநாள் அற்புத சொப்பனம்
கண்டவன் களித்தக்கனவில் மட்டற்ற மோகங்கொண்டான்!
பூவுலகாளும் சத்ராபதியாகப் பூபதியிருக்கக் கனவுகண்டு,
அலெக்ஸாண்டர்நெபோ-லி-யன்ஸீஸரெல்லாரும் அவனுக்குப்பின்னடைந் திருக்கக்
[கண்டான்.

6. சொப்பனங் கண்டவன் சிக்கனமாகவே யிருக்கப்பார்த்தான்
சொப்பனம் பலித்தாற் போலவேயவனும் நடந்துகொண்டான்
சொப்பனபுருஷனும் கந்தர்ப்பநகரும் ஜாக்ரத்தில்நாசமா மென்றறியான்
எப்படியுமவன் சொப்பனமழியக் கரடியொருபக்கம் சேவலொருபக்கம்—

7. ஆகவேயிருந்து கொண்டவையிரண்டும் சிங்கமொன்றோடுற வாடிக்கொண்டு
கனவேநனவாகக் கந்தர்ப்பநகர்கட்டி வாழ்வானைத் தொந்தரை செய்தனபார்!
கந்தர்ப்பநகரம் பொடிபடச்செய்த குக்குடங்கரடிசிங்கங்க ளையவனடக்கப்பார்த்
பார்த்தவன் தீர்ப்பாகச் செய்கார்யம் சொல்லு’றேன் கேளிரெம்பிள்ளைகளா! [தான்!

8. அவனுக்கிருந்த அற்புதநேயர்கள் இருவரிலொருவரை யழைத்துச்சொன்னான்—
மற்றொருநேயர் நான்வ’ல்லையுனக்கொரு கும்பிடுபோடு’றேன் போய்வாவென்றார்.—
"சற்றுநான் சொல்வதை யுற்றுக்கேள் நண்பரேசண்டை
கற்றுளகரடியு மங்கேயிருக்கதைப் பற்றிநீர்மீதேறிக் கொள்ளு"மென்றான்!

9. "என்னுடையற்புதப் பருந்துமேயந்தக் குக்குடமாம்ப்ரான்ஸின் கொட்டம்தீர்க்கும்:
பொன்னுடையென்கைக் குரடாவாலேயந்த இழிவுள்ளசிங்கத்தின் கொட்டத்தை
[யடக்கு’றேன்பார்!
என்றவன்தானும் வீரம்பேசிமெத்த அஹம்பாவக்கிறுக்கும் தலைக்கேறியே
சிங்கத்தையடக்கிநான் ‘ஸர்க்கஸ்’வித்தையாடச் சிநேகிதரேநீரும் பார்க்கலாமென்
[றான்.

10. லேசாய் நினைத்தவோர் குக்குடம்சண்டைசெய் சேவலாமாறியே பருந்தைவதைத்
அற்பமாய்நினைத்த சிங்கமுமவன்கைக் குரடாவுக்கடங்கிப் படிவதாயில்லை! [தது:
கனவிலேசாத்திய யானதைநனவிலே சாதிப்பதெளிதில்லை யென்றுணர்ந்தான்:
உணர்ந்தவனுண்மையிலொன்றுமில்லையப்பாஊருக்குப்போய்வாரேன்வேடிக்கைபோதுமென்றான்.

11. வேடிக்கையாகவே நாங்களுமுன்கூட வீட்டுக்குவந்தங்கே விருந்துண்டுபோவோமென்
றாடினசிங்கமும் அற்புதக்குக்குடம்தானும் அவன்வீட்டுவாசலில் முன்சென்றுநிற்க
தேடிவந்தப்பெருங்கரடி யவன்நேசர் மீதேறிக் கொண்டு'வில்யம் [வும்
ஓடிவரவெதிர் பார்த்திருக்கக் கண்டானச்சோ, அச்சோவே !"

12. இப்படி யாகவேநல் லெழில்புருஷன் உவில்-லி-யம்தன்
சொப்படி வித்தையாடிச் சொப்பனத்தை நம்பிக்கெட்ட
தப்படியாம் வித்தையைப்பார்-ஹதப்போராய் நடத்திவைத்த
மெய்ப்படியாள் குஹன்வாழி! எப்படியுமிக்கதையை வாசித்தார்கேட்டார்வாழி !

---

## AMERICAN VERDICT ON THE WAR.

### A REPLY TO THE GERMAN PROFESSORS.

**SPIRITED INDICTMENT.**

The following has been sent to us for publication and we gladly make room for the same:—

Ninety-three of the most prominent men of Germany, distinguished in various branches of science, art, education, and literature, have recently circulated broadcast throughout America a letter, entitled "An Appeal to the Civilized Word," in which they attempt to change public opinion in the United States on the subject of the war. Mr. Church, president of the Carnegie Institute, at Pittsburgh, and author of "The Life of Oliver Cromwell," has made reply to the German appeal, which is addressed to Dr. Fritz Schaper, of Berlin. He says:—

It gives me a feeling of pity to note the importunity with which the people of Germany are seeking the good opinion of America in this strife. It is greatly to their credit that they wish to stand right in the judgment of this nation. But Germany need have no fear that American public opinion will be perverted by the lies and calumnies of her enemies. We are all going deeper than the surface in our search for the truth. Your letter speaks of Germany as being in a struggle "which has been forced upon her." That is the whole question; all others are subsidiary. If this struggle was forced upon Germany, then, indeed, she stands in a position of mighty dignity and honour, and the whole world should acclaim her and succour her, to the utter confusion and punishment of the foes who have attacked her. But if this outrageous war was not forced upon her, would it not follow in the course of reason that her position is without dignity and honour and that it is her foes who should be acclaimed and supported to the extreme limit of human sympathy?

I believe, dear Dr. Schaper, that the judgment on this paramount question has been formed. That judgment is not based upon the lies and calumnies of the enemies of Germany, nor upon the careless publications contained in the newspapers, but upon a profound study of the official correspondence in the case. What do the official documents prove?

After reviewing the evidence Mr. Church concludes:—

Who began it? Was it England? Scarcely so, for England, in so far as her army is concerned, had yielded to the popular plea for arbitration; she was not ready for war and will not be ready for another six months. Was it France? Was it Russia? Not one of the 93 distinguished men who have sent me this letter, if they will read the evidence, will say so. It was Austria, who, by her unreasonable and inexorable attack on Serbia, began the war, supported at every step by Germany, who, in her turn, gave notice to the Powers of Europe that any interference with Austria would be resented by Germany to the full limit of war.

THE CRIME AGAINST BELGIUM.

Mr. Church proceeds:—

The next point in your letter reads thus:— "It is not true that we trespassed in neutral

Belgium." Have these 93 men studied well the letter they have signed? Could intellects so superbly trained deliberately certify to such an unwarrented declaration? Has any one of my 93 honoured correspondents read the appeal to the American people by Imperial Chancellor von Bethman-Hollweg, published in the American newspapers on August 15? I fear not, fo in that statement the Chancellor said :—" We were compelled to override the just protests of the Luxemburg and Belgian Governments. The wrong—I speak frankly—that we are committing we will endeavour to make good as soon as our military goal has been reached."

What will the good concience of the German people say when, in spite of its passion in the rage of war, it grasps the awful significance of the confession of its Imperial Chancellor? "The wrong that we are committing." The wreck and ruin of a country that has done you no injury the slaughter of her sons, the expulsion of her King and government, the blackmail of her substance, the destruction of her cities, with their happy homes, their beautiful monuments of historic times, and the priceless works of human genius! "The wrong that we are committing." Worst of all, when the desperate and maddened populace, seeing their sons slain and their homes in flames, fired from their windows in the last instinct of nature, your troops, with barbaric ferocity, put them to the sword without distinction of age or sex! The wrong! Oh, Doctor Schaper, if these conditions should ever be reversed and these foreign soldiers should march through the streets of Berlin, would not you, would not all of my 93 correspondents if they saw their homes battered in ruins and their sons dead in the streets, would they, too, not fire from their windows upon the merciless invaders? I am sure I would do so!

## GERMAN MILITARISM.

Your reference to German militarism brings up in my mind the conviction that this war began potentially 25 years ago, when Emperor William II. ascended the throne, declared himself Superme War Lord, and proceeded to prepare his nation for war. His own children were raised from their babyhood to consider themselves soldires, and to look forward to a destiny of slaughter: and here in America we know even his daugeter only by her photograph in a colonel's uniform. And as with his own children, so all the youth of his empire were brought up.

Going far away from your great philosopher, Kant, who, in his Categorial Imperative, has taught us all a new golden rule, the national spirit of Germany has been fed on the sensual materialism of Nietzsche, on the undisguised bloodthirst of General von Bernhardi, on the wicked war dreams of Treitschke and on the weak morality of von Bulow; and we behold in every scrap of evidence that we can gather from your Emperor, his children, his soldiers, his statesmen and his professors, that Germany held herself a nation apart from the rest of the world and superior to it, and predestined [to maintain that superiority by war. In contrast to this narrow and destructive spirit of nationalism, we in America have learned the value of humanity above the race, so that we cherish all mankind in the bosom of our country. Therefore we can do nothing but execrate the conduct of your Emperor, who has driven his troops to slaughter their brethern and be slaughtered by them in this bloody and unspeakable conflict.

And so, at last, my dear Dr. Schaper, we find ourselves shocked, ashamed, and outraged that a Christian nation should be guilty of this criminal war. There was no justification for it. Armed and defended as you were, the whole world could never have broken into your borders. And while German culture still has something to gain from her neighbours, yet the intellectual progress which Germany was making seemed to be lifting up her own people to better things for themselves and to an altruistic service to mankind. Your great nation floated its ships in every ocean, sold its wares in the uttermost parts of the earth, and enjoyed the good favour of humanity, because it was trusted as a humane State. But now all this achievement has vanished, all this good opinion has been destroyed. You cannot in half a century regain the spiritual and material benefits which you have lost. Oh, that we might have again a Germany that we could respect, a Germany of true peace, of true progress, of true culture, modest and not boastful, for ever rid of her war lords nnd her armed hosts, and turning once more to the uplifting influence of such leaders as Luther, Goethe, Beethoven, and Kant! But Germany, whether you win or lose in this war, has fallen, and the once glorious nation must continue to pursue its course in darkness and murder until conscience at last bids it withdraw its armies back to its own boundaries, there to hope for the world's pardon upon this inexpiable damnation.